Regd. No. 2975

ஸ்ரீ:

# ஸ்ரீ ராமாநுஜன் - 333

ஆசிரியர்: P. B. அண்ணங்கராசாரியர்.

# SRI RAMANUJAN

Editor:
*Mahamahimopadhyaya*
P. B. ANNANGARACHARYA, KANCHIPURAM-631503

வருஷச் சந்தா ரூ. 10 ஜீவியச் சந்தா ரூ. 100

**ராக்ஷஸ வருஷ பங்குனி விசா[illegible]**

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.



[illegible]
திருவடிகளே சரணம்.

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி*
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி—ஏழ்பாரு
முய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம்வாழி*
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

1976 மார்ச், பங்குனி மீ

# திருநாராயணபுரத்துப் பாடசாலையில் சதாப்தீ மஹோத்ஸவம்

(வித்வான். தி. அ. அக்காரக்கனி. *ஸம்பத்குமாராசாரியர்*. M. A)

"ஸ்ரீரங்கமங்கலமணிம்...ஸ்ரீசம் நமாமி சிரஸா யதுசைலதீபம்" என்று ஸ்ரீவைஷ்ணவவுலகம் முப்போதும் வாழ்த்தும் திவ்யதேசங்களில் எம்பெருமானாரின் விசேஷ அபிமானத்திற்கு பாத்ரமான திருநாராயணபுரத்தில், "வேதவேதாந்த போதிநீ" என்கிற வேதசாஸ்த்ரபாடசாலையொன்று 1856-ம் வருஷத்தில் ஸ்ரீமான். உ. வே. தி. அ. அக்காரக்கனி நரஸிம்ஹாசார்யர் ஸ்வாமி என்கிற மஹானால், தேவஸ்தானத்தின் அங்கமாக ஆரம்பிக்கப்பட்டு, மாணவர்களுக்கு வைதிகவித்யை கள் பலவற்றையும் கற்பித்து வருகிறது. இதில் கற்றுத்தேர்ந்தவர்கள் பலர் பல சாஸ்த்ரங்களில் புகழ்பெற்ற பெரிய வித்வான்களாக விளங்கி வந்தனர், விளங்கிவருகிறார்கள். இப்பாடசாலைக்கு நூற்றாண்டு விழா கொண்டாடவேணுமென்று பல வருடங்களாக அபிமானிகள் மேற்கொண்ட முயற்சி தற்சமயம் ஸபலமாகி உத்ஸவம் விசேஷமாக நடைபெற்றது.

சென்ற 16-2-1976 திங்கட்கிழமையன்று காலை 11-30 மணிக்கு நமது உப ஜநாதிபதி உயர்திரு ஜத்தி அவர்களும் கர்ணாடக ராஜ்ஜிய ஆளுநர் உயர் திரு உமா சங்கர் தீக்ஷிதஜீ அவர்களும், மற்றும் பல உயர்பதவி வாழும் அதிகாரிகளும், பாடசாலைக்கு எதிரில் அமைக்கப்பட்ட பந்தலில் வெகு அழகாக அலங்கரிக்கப்பெற்ற மேடையில் அமர்ந்திருந்து விழாவைத் தொடங்கிவைத்தார்கள். மூன்றுநாள் காலை மாலைகளில் இரண்டு வேளைகளிலும் பல வித்வான்கள் பற்பல சாஸ்த்ரங்களைப்பற்றிச் சொற்பொழிவாற்றினார்கள். ஸ்ரீ பாஸ மஹாகவியியற்றிய பஞ்சராத்ரம், ஊருபங்கம் முதலிய பல ஸம்ஸ்க்ருத நாடகங்களும் அபிநயிக்கப்பட்டன. பாடசாலையில் பல வாண்டுகள் உபாத்யாயர்களாக விருந்து வைகுண்டவாஸிகளான பல பெரியோர்களின் திருவுருவப்படங்கள் திறந்து வைக்கப்பட்டன. நூற்றாண்டு விழாவுக்கு நினைவாக ஒரு புதிய கட்டிடம் கட்ட உத்தேசித்து அதற்காக அடிக்கல் நாட்டப்பட்டது. சிறப்புமலர் ஒன்று வெளியிடப்பட்டது. உபதேசரத்தினமாலை, ஸ்ரீஸம்பத்குமார ஸ்தவம் முதலிய சில சிறிய புத்தகங்கள் வெளியிடப்பட்டன. பாடசாலையில் நீண்ட காலம் தொண்டுசெய்து ஓய்வுபெற்ற பல வித்வான்களுக்கு பொன்னாடை ஸமர்ப்பிக்கப்பட்டது. பலவிதமான போட்டிகளிலும் பரீக்ஷைகளிலும் தேர்ச்சிபெற்ற மாணவர்களுக்குப் பரிசுகள் வழங்கப்பட்டன. மூன்றாவது நாள் மாலையில் செல்வப்பிள்ளையும் எம்பெருமானாரும் நம் பாடசாலைக்கு எழுந்தருளி விபவமாக மண்டபப்படியுத்ஸவம் கண்டருளினார்கள்.

இப்புடைகளில் இம்மஹோத்ஸவம் வெகு விபவமாகக்கொண்டாடப்பட்டதற்கு முக்கிய காரணம், அத்யக்ஷரான ஸ்ரீ. உ. வித்வான் ஸ்ரீரங்கம் நரஸிம்ஹாசாரியர், மற்றும் உதவி உபாத்யாயர்கள், மாணவர்கள், பெங்களூரில் வாழும் ப்ரஸித்த வக்கீல் ஸ்ரீ. உ. வெங்கடரங்கய்யங்கார் முதலிய பற்பல பெரியோர்களின் உத்ஸாஹமும் விடாமுயற்சியுமே யாகும். பல்லாண்டு பல்லாண்டு வாழ்ந்திடுக.

ஸ்ரீ:

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்



ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்

ஸ்ரீகாஞ்சி ப்ரதிவாதி பயங்கரம்

# அண்ணங்கராசாரியர் ஸ்வாமியின்

ராக்ஷஸ வருஷத்திய

# மீன விசாகோத்ஸவப் பத்திரிகை

ஸ்ரீஸ்வாமியின் எண்பத்தைந்தாவது திருநக்ஷத்ர பூர்த்தியை முன்னிட்டு

ஸ்ரீகாஞ்சியில் ஸ்வாமியின் திருமாளிகையில்

நாளது மாசிமீ **28உ (11-3-76)** வியாழன் முதல்

பங்குனிமீ **7உ (20-3-76)** சனிக்கிழமைவரை

வேதபாராயணம், திவ்யப்ரபந்தஸேவை, ரஹஸ்யாநுஸந்தாநம், ஸ்தோத்ரபாடம், வித்வான்களின் உபந்யாஸம் இவை நடைபெறும். ஆப்தர்கள் அனைவரும் கூடியிருந்து சிறப்பாக நடப்பிக்கும்படி ப்ரார்த்திக்கப் படுகிறார்கள். வேதபாராயண கோஷ்டி கடந்த ஸம்வத்ஸரங்களிற் போலவே யஜுர்வேதம் க்ரமாந்தம் திருவீதி வலத்துடன் நடைபெறும்.

காஞ்சிபுரம்,
29—2—76.

இங்ஙனம்,
ப்ரதிவாதிபயங்கரம் செல்வமணி என்கிற
ரங்கநாத தாஸன்.

## கடந்தவாண்டு மீனவிசாக நிகழ்ச்சிக்கு அபிமானிகளின் அன்பளிப்பு.

| பெயர் | ரூ. |
|---|---|
| ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி திருக்குறுங்குடி ஜீயர் ஸ்வாமி | 25 |
| ஸ்ரீமத் பரமஹம்ஸ ஸ்ரீமன் நாராயண ராமாநுஜ ஜீயர் ஸ்வாமி | 101 |
| ஸ்ரீமான் M. ரங்கஸாமிஐயங்கார் MDS | 100 |
| A. ஸ்ரீநிவாஸ ஐயங்கார் ,, | 101 |
| A. V. கன்னைய நாயுடு ,, | 101 |
| T. S. திருமலாசாரியர் ,, | 25 |
| A. K சடகோபாசாரியர் ,, | 50 |
| ஸ்ரீ K. V. நரஸிம்ஹன் (Auditor) வகைபறுக்கள் MDS | 167 |
| C. க்ருஷ்ணஸ்வாமி, ,, | 10 |
| G V. லக்ஷ்மீநாராயணன் ,, | 25 |
| T. A. திருவேங்கடாசாரியர் ,, | 11 |
| K. M. ராமாநுஜ ஐயங்கார் ,, | 10 |
| M. ஏகாம்பர முதலியார் ,, | 25 |
| V. N. தேவநாதன் ,, | 11 |
| திருவாலவட்டம் துரைசாமி ,, | 5 |

| ஸ்ரீமான்கள் | | ரூ. |
|---|---|---|
| நாராயணக்கோனுர் | Madras | 100 |
| அண்ணுமலே நாடார் | ,, | 50 |
| P. V, பாண்டுரங்கம் செட்டி | ,, | 25 |
| சக்ரபாணி செட்டியார் சைதை | ,, | 15 |
| P. G. மாணிக்க செட்டியார் | ,, | 10 |
| டாக்டர் வெங்கடக்ருஷ்ணய்யா | ,, | 15 |
| (அகரம்) R. வரதன் | ,, | 100 |
| M A. க்ருஷ்ணம்மா | ,, | 100 |
| V. C ரங்கதுரை | ,, | 50 |
| C. V. லக்ஷ்மீவராஹன் | ,, | 10 |
| A. ராமஸ்வாமி நாயுடு | ,, | 25 |
| தேசூர் ஸ்ரீநிவாஸவரதாசாரியர் | ,, | 25 |
| K. S. பார்த்தஸாரதி ஐயங்கார் | ,, | 100 |
| R. வரதராஜ ஐயங்கார் ஸ்ரீரங்கம் | | 25 |
| H. ஹனுமந்தாச்சாரி | | 5 |
| A. சீதாராமன், அசோக நகர் | | 30 |
| வனிதம்மா | | 5 |
| N. வேணுகோபால நாயகர் | | 5 |
| R. V. சேஷாத்ரி ஸ்வாமி B.A., B.L., | | 25 |
| ரங்கநாயகி கொருக்குப்பேட்டை | | 15 |
| K. திருவேங்கடாசாரி அட்வகேட் | | 15 |
| S. அப்பன் ஐயங்கார் (அச்சந்தவிழ்த்தான்) | | 10 |
| K. K. A ஸ்ரீநிவாஸாசாரியர் Bombay | | 25 |
| P. A. ஸ்ரீநிவாஸாசாரியர் பெங்களூர் | | 75 |
| திண்டுக்கல் ராஜகோபாலன் | | 100 |
| திண்டுக்கல் தோப்பு ராமராமானுஜர் | | 30 |
| Dr.N. ஸ்ரீநிவாஸன் | | 20 |
| N. P. ஸ்ரீரங்காசாரியர் | | 5 |
| அச்சிறுவாக்கம் முனுசமிரெட்டியார் | | 15 |
| M. செல்லபெருமாள்கோனுர், மதுரை | | 30 |
| முத்துராமரெட்டியார், ராதாபுரம் | | 10 |
| ஸ்ரீமான் பாலக்ருஷ்ணபிள்ளை இளையாண்டபட்டு | | 25 |
| K. P. சந்த்ரஹாஸன் ஈரோடு | | 5 |
| C. வெங்கடாசலம் | ,, | 5 |
| V. எதிராஜன் | ,, | 5 |
| S. ஸத்யமூர்த்தி ஸ்வாமி க்வாளியர் | | 25 |

| ஸ்ரீமான்கள் | ரூ. |
|---|---|
| ஜலகண்டபுரம் நாகப்பன் பொன் னுடைகளும் பொற்காணிக்கைகளும் | |
| காரைக்குடி T. R. ராகவ ஐயங்கார் டிரஸ்ட் | 10 |
| களம்பூர் ராமநாதன் செட்டியார் | 85 |
| K. V. ராஜகோபாலன் குத்தாலம் | 50 |
| ஸ்ரீவரதாசாரியர் கான்பூர் | 15 |
| T. பார்த்தஸாரதி ஐயங்கார் காஞ்சீ | 10 |
| A. ஸ்ரீநிவாஸ ஐயங்கார் மன்னுர்குடி | 25 |
| மண்டகப்பட்டு தேவநாதாசாரியர் | 5 |
| R. ஸ்ரீநிவாஸ ஐயங்கார் நேமத்தான்பட்டி | 30 |
| T. V. G ஆச்சார்ய, ஒரிஸ்ஸா | 105 |
| T. V. க்ருஷ்ணஸ்வாமி ஐயங்கார் பேராவூரணி | 5 |
| R.ஜகந்நாத ஐயங்கார் பாண்டிச்சேரி | 11 |
| சேதுராம செட்டியார் ,, | 100 |
| ஸ்ரீவைஷ்ணவரத்னம் D. K. ராஜு ராஜபாளையம் | 250 |
| S. T. சடகோபாசாரியர் ராமநாதபுரம் | 10 |
| கரியமாணிக்கம் ராதாக்ருஷ்ணன் | 10 |
| சேரங்குளம் K. R. ராஜகோபால ஐயங்கார் (பட்டு ராஜம்) | 10 |
| காஞ்சீபூர்ண செட்டியார் சேலம் | 10 |
| R. பார்த்தஸாரதி ஐயங்கார், ஸ்ரீவில்லிபுத்தூர் | 5 |
| தேவநாத ஐயங்கார் செகந்திராபாத் | 20 |
| வரதராமாநுஜாசாரியர் P M. சென்னை | 10 |
| தென்திருப்பேரை மகரபூஷணமையங்கார் | 20 |
| திருமாணிக்குழி லக்ஷ்மீநாராயணன் | 25 |
| திருப்பத்தூர் காளியப்ப முதலியார் | 50 |
| ,, ஷண்முக முதலியார் | 50 |
| திருச்சி சுந்தரராஜன் செட்டியார் | 50 |
| தூத்துக்குடி கோவிந்தசாமி | 31 |
| விட்டலாபரம் வெங்கடாசாரியர் | 5 |
| விக்ரவாண்டி திருநாராயண பாகவதர் | 25 |
| T. S வாஸன் மதராஸ் | 10 |

# திருநாராயணபுரத்துப் பாடசாலையில் சதாப்தீ மஹோத்ஸவம்

(வித்வான். தி. அ அக்காரக்கனி. *ஸம்பத்குமாராசாரியர்.* M. A)

"ஸ்ரீரங்கமங்கலமணிம்...ஸ்ரீமம் நமாமி சிரஸா யதுசைலதீபம்" என்று ஸ்ரீவைஷ்ணவவுலகம் முப்போதும் வாழ்த்தும் திவ்யதேசங்களில் எம்பெருமானாரின் விசேஷ அபிமானத்திற்கு பாத்ரமான திருநாராயணபுரத்தில், "வேதவேதாந்த போதினீ" என்கிற வேதசாஸ்த்ரபாடசாலையொன்று 1856-ம் வருஷத்தில் ஸ்ரீமான். உ. வே. தி. அ. அக்காரக்கனி நரஸிம்ஹாசார்யர் ஸ்வாமி என்கிற மஹானால், தேவஸ்தானத்தின் அங்கமாக ஆரம்பிக்கப்பட்டு. மாணவர்களுக்கு வைதிகவித்யைகள் பலவற்றையும் கற்பித்து வருகிறது. இதில் கற்றுத்தேர்ந்தவர்கள் பலர் பல சாஸ்த்ரங்களில் புகழ்பெற்ற பெரிய வித்வான்களாக விளங்கி வந்தனர், விளங்கிவருகிறார்கள். இப்பாடசாலைக்கு நூற்றாண்டு விழா கொண்டாடவேணுமென்று பல வருடங்களாக அபிமானிகள் மேற்கொண்ட முயற்சி தற்சமயம் ஸபலமாகி உத்ஸவம் விசேஷமாக நடைபெற்றது.

சென்ற 16-2-1976 திங்கட்கிழமையன்று காலை 11-30 மணிக்கு நமது உப ஜநாதிபதி உயர்திரு ஜத்தி அவர்களும் கர்ணாடக ராஜ்ஜிய ஆளுநர் உயர் திரு உமா சங்கர் தீக்ஷிதஜீ அவர்களும், மற்றும் பல உயர்பதவி வாழும் அதிகாரிகளும், பாடசாலைக்கு எதிரில் அமைக்கப்பட்ட பந்தலில் வெகு அழகாக அலங்கரிக்கப்பெற்ற மேடையில் அமர்ந்திருந்து விழாவைத் தொடங்கிவைத்தார்கள். மூன்றுநாள் காலை மாலைகளில் இரண்டு வேளைகளிலும் பல வித்வான்கள் பற்பல சாஸ்த்ரங்களைப்பற்றிச் சொற்பொழிவாற்றினார்கள். ஊரஸ மஹாகவியியற்றிய பஞ்சராத்ரம், ஊருபங்கம் முதலிய பல ஸம்ஸ்கருத நாடகங்களும் அபிநயிக்கப்பட்டன. பாடசாலையில் பலவாண்டுகள் உபாத்யாயர்களாக விருந்து வைகுண்டவாஸிகளான பல பெரியோர்களின் திருவுருவப்படங்கள் திறந்து வைக்கப்பட்டன. நூற்றாண்டு விழாவுக்கு நினைவாக ஒரு புதிய கட்டிடம் கட்ட உத்தேசித்து அதற்காக அடிக்கல் நாட்டப்பட்டது. சிறப்புமலர் ஒன்று வெளியிடப்பட்டது. உபதேசரத்தினமாலை, ஸ்ரீஸம்பத்குமாரஸ்தவம் முதலிய சில சிறிய புத்தகங்கள் வெளியிடப்பட்டன. பாடசாலையில் நீண்ட காலம் தொண்டுசெய்து ஒய்வுபெற்ற பல வித்வான்களுக்கு பொன்னாடை ஸமர்ப்பிக்கப்பட்டது. பலவிதமான போட்டிகளிலும் பரீக்ஷைகளிலும் தேர்ச்சிபெற்ற மாணவர்களுக்குப் பரிசுகள் வழங்கப்பட்டன. மூன்றாவது நாள் மாலையில் செல்வப்பிள்ளையும் எம்பெருமானாரும் நம் பாடசாலைக்கு எழுந்தருளி விபவமாக மண்டபப்படியுத்ஸவம் கண்டருளினார்கள்.

இப்புடைகளில் இம்மஹோத்ஸவம் வெகு விபவமாகக்கொண்டாடப்பட்டதற்கு முக்கிய காரணம், அத்யக்ஷரான ஸ்ரீ. உ. வித்வான் ஸ்ரீரங்கம் நரஸிம்ஹாசாரியர், மற்றும் உதவி உபாத்யாயர்கள், மாணவர்கள், பெங்களூரில் வாழும் ப்ரஸித்த வக்கீல் ஸ்ரீ. உ. வெங்கடரங்கய்யங்கார் முதலிய பற்பல பெரியோர்களின் உத்ஸாஹமும் விடாமுயற்சியுமே யாகும். பல்லாண்டு பல்லாண்டு வாழ்ந்திடுக.

# ஸ்ரீ ராமாநுஜன்–333



ஆசிரியர்:

மஹாமஹிமோபாத்யாய ஸ்ரீகாஞ்சீ ப்ரதிவாதிபயங்கரம்

அண்ணங்கராசாரியர்.

ஸம்புடம் 28 | ராக்ஷஸஸஹ மாசிமாதம் 10—3—76 | ஸஞ்சிகை 9


## நமது பகவத்விஷயப் பதிப்பைப்பற்றிய அறிக்கை

திருவாய்மொழியை ஒன்பதினாயிரப்படி இருபத்துநாலாயிரப்படி, ஈடுமுப்பத்தாறாயிரப்படி ஆகிய மூன்றுவியாக்கியானங்களோடும் பதிப்பித்துவருகிறோமென்பது ஸ்ரீவைஷ்ணவர்கள் பெரும்பாலு முணர்ந்ததே. இப்பதிப்பில 900பாசுரங்களின் வியாக்கியானம் முடிவு பெற்றது. அதாவது 9பத்துக்கள் அச்சிட்டுமுடிக்கப்பட்டன வென்றபடி. பத்தாப்பத்து அச்சாகிவருகின்றது. இதுவும் சித்திரையில் செய்ய திருவாதிரையன்று முடிவுபெற்று வெளிவந்துவிடும். முதற்பத்தும் இரண்டாம் பத்தும் சேர்ந்து முதல் ஸம்புடமாகவும், மூன்றும்பத்தும் நான்காம்பத்தும் சேர்ந்து இரண்டாம் ஸம்புடமாகவும், ஐந்தாம் பத்தும் ஆறும்பத்தும் சேர்ந்து மூன்றும் ஸம்புடமாகவும். ஏழாம் பத்தும் எட்டாம் பத்தும் சேர்ந்து நான்காம் ஸம்புடமாகவும் சிறந்தபைண்டுடன் ஸித்தமாகியுள்ளன. ஒன்பதாம்பத்தும் பத்தாம்பத்தும் சேர்ந்து ஐந்தாம்ஸம்புடமாக (சித்திரைமாதத்தில்) ஸித்தமாகப்போகிறது. அதன் பிறகு ஈட்டுப் பிரமாணத்திரட்டு தனிஸம்புடமாக வெளிவரப்போகின்றது. இப்பதிப்பு ஆரம்பம் செய்த சென்றவருஷத்தில் சிலர் அட்வான்ஸாக ரூ-30, 50—இப்படியாகச் செலுத்தி ஒன்று, இரண்டு, மூன்று ஸம்புடங்கள்மட்டும் பெற்றிருக்கிறார்கள். அன்னவர்களுக்கு முக்கியமாகத் தெரிவிக்கிறோம்; தனித்தனி ஸம்புடங்கள் விற்பனை செய்யப் படுவதில்லை. ஐந்துஸம்புடங்களும் சேர்ந்தே 100/-நூறுரூபாய்க்கு விற்பனை செய்யப்படும். இந்தநிபந்தனை பழைய மெம்பர்களுக்கும் புதிய மெம்பர்களுக்கும் துல்யமானது. நிகழும் மாசிமாத முடிவுக்குள்— ஏற்கனவே அட்வான்ஸ் தொகை செலுத்தியிருப்பவர்கள் மிச்சம் தொகையையும் பூர்த்தியாகச் செலுத்தி. இதுகாறும் பெற்றுக்கொள்ளாத ஸம்புடங்களைப் பெற்றுக்கொள்ள வேணும். ஸம்புடம் ஒன்றுக்குத் தபால் கூலி ரூ2-00 மட்டும். (ரிஜிஸ்ட்ரேஷன் உட்பட.)

இப்படிக்கு, தி. அ. அனந்தாழ்வான்.

# ரஸிகர்களுக்கு அரிய பெரிய சொற்பொருள் விருந்து P. B. A.

நேற்று மார்கழிமாதத்தில் சென்னையில் திருப்பாவைப் பிரவசனம் நடந்த போது *அம்பரமே தண்ணீரே* என்கிற பதினேழாம் பாசுரம் ப்ரவசனமாகும் போது **அம்பரம்** என்கிற சொல்லைப் பற்றிப் பேசுகையில், இச்சொல் வடசொல்லேயன்றித் தமிழ்ச்சொல்அன்று; *அம்பரம் வ்யோமவஸ்த்ரயோ:* என்பது வடமொழி நிகண்டு; ஆகாசத்திற்கும் அம்பரமென்று பெயர்; வஸ்த்ரத்திற்கும் அம்பரமென்று பெயர். இப்பாட்டில் இவ்விரண்டு பொருள்களிலும் இச்சொல் பிரயோகிக்கப்பட்டுள்ளது. முதலடியில் [*அம்பரமே தண்ணீரே* என்றவிதில்] வஸ்த்ரம் என்பது பொருள். மேல் ஐந்தாமடியில் [*அம்பரமூடறுத்து* என்றவிதில்] ஆகாசமென்றுபொருள்; கீழே* **ஆழிமழைக்கண்ணா*** என்கிற நாலாம் பாசுரத்தில் **ஆழி**யென்கிற சொல் மூன்று விசை பிரயோகிக்கப் பட்டுள்ளது; இது தமிழ்ச் சொல்லேயன்றி அம்பரமென்பது போல் வடசொல்லன்று. மூன்றுதடவைகளிலும் மூன்றுவகையான பொருள்களில் (ஆழியென்கிற சொல்) பிரயோகிக்கப்பட்டுள்ளது. முதலடியில் ஆழியென்பதற்கு கம்பீரமான வென்று பொருள். இரண்டாமடியில் ஆழியென்பதற்குக் கடலென்று பொருள். ஐந்தாமடியில் ஆழியென்பதற்குத் திருவாழியாழ்வானென்று பொருள். ......இங்ஙனே சில விஷயங்கள் புதிதாகச் சொன்னேன். இதையெல்லாம் ஊன்றிக் கேட்ட ஒரு அட்வகேட் ஸ்வாமி, உபந்யாஸம் முடிந்த பிறகு உள்ளேவந்து "இன்று கேட்ட **அம்பரம் ஆழி** விஷயங்கள் புதுமையாயும் அருமையாயுமிருக்கின்றன; இப்படி இன்னுஞ்சில சொற்களுமிருக்கக்கூடுமே; ஸ்வாமிக்கு எண்பத்தைந்து திருநக்ஷத்ரபூர்த்தி ஸமீபித்திருப்பதால் அதற்கு நினைவுமலராக இத்தகைய சொற்கள் ஏறக்குறைய எண்பத்தைந்து தேர்ந்தெடுத்து வெளியிட்டால் நலமாயிருக்கும்; திருவுள்ளம் பற்றவேணும்" என்றார். 'பார்ப்போம்; சிரமப்பட்டுச் செய்யவேண்டிய காரியமிது; அவகாசமுள்ளபோது பார்க்கிறேன்" என்றேன். அது கேட்ட அவர் 'அப்படி ஸாதித்துவிடக்கூடாது; இது அடியேனுடைய வேண்டுகோள் மட்டுமன்று; இன்னும் சில ஆப்தர்களும் ஆசைப்படுகிறார்கள்; இது ரஸிகர்களுக்குப் பெரிய விருந்தாயிருக்கும். அவசியம் திருவுள்ளம் பற்றவேணும்" என்று நிர்ப்பந்தமாகச் சொல்லிவிட்டுச் சென்றார். அந்த க்ஷணத்திலேயே, இது செய்யவேண்டிய தொன்றே என்றுதோன்றிற்று. நான் கங்குலும்பகலுங்கண்டுயிலறியாதவனாதலால் உடனே எழுதத் தொடங்கினேன்; உயிரெழுத்தாதியான சொற்களில் மட்டும் எண்பத்தைந்துக்குமேல் அன்றிரவே எழுதிமுடிக்கப்பட்டன. மறுநாள்காலையிலேயே அவரைவரவழைத்து, எழுதின காகிதத்தைக் கையில் கொடுத்தேன். அவர் ஆதி நடு அந்திவாய் வாசித்துப்பார்த்துவிட்டு, இதை நான் பூர்த்தியாக எழுதிமுடித்து விட்டதாக நினைத்துப் பரமஸந்தோஷம்! என்றார், 'உயிரெழுத்தாதியான சொற்கள் மட்டுமே இவை; மெய்யெழுத்தாதியான சொற்களை யெழுதப்புக்கால் அவை நூற்றுக் கணக்கில் தேறும்' என்றேன். 'அவற்றையும் எழுதியருளவேணும்' என்றார். இடையில் ஒரு மாதம் வெவ்வேறு காரியங்களினால் இதை மறந்தேயிருந்தேன்.

இன்று 7—2—76 தேதி ரதஸப்தமி; காலை தேவப்பெருமாள் ஸூர்ய ப்ரபையில் புறப்பாடு கண்டருளுகிறார்; இயல் கோஷ்டியில் இன்று திருச்சந்த விருத்தம் ஸேவை தொடக்கமாகிறது. *பூநிலாய வைந்துமாய்* என்பது இயல தொடக்கம்;

பூ என்கிற சொல்லில் தொடங்குமவை—திருச்சந்தவிருத்தமும் இராமானுச நூற்றந்தாதியும். இரண்டிலும் சொல்வடிவம் ஒன்ருயிருந்தாலும் பொருளில் வேற்றுமையுண்டு. திருச்சந்தவிருத்தத்தின் முதற்சொல்லான பூ என்பது வடசொல விகாரம் (பவர்க்க சதுர்த்தம்.) *பூர் பூமிரசலாநந்தா* என்கிற அமரகோஶத்தின்படி பூமியென்னும் பொருளையுடையது நூற்றந்தாதியின் முதற் சொல்லானது புஷ்பமென்னும் பொருளையுடையதான தமிழ்ச்சொல். இந்நிலைவிலிருந்து முன்பு எழுதத்தொடங்கிவிட்டிட்ட விஷயம் நினைவுக்குவர, (பல பொருள்களையுடைய மெய்யெழுத்தாதியான சொற்களும் எழுதி முடிக்கப்பட்டன. க்ரமேண வெளிவரக்காணலாம்.

## —உயிரெழுத்தாதியான பல பொருட்சொற்கள்—

(திவ்யப்பிரபந்தப் பிரயோகங்களைப்பற்றி மட்டுமே.)

**1** அகம்—1. உட்புறம் *அகஞ்சிவந்த கண்ணினராய்.* (பெரிய திருவந்தாதி.)
2. க்ருஹம் *ஒடியகம்புக்கு.* (பெரியாழ்வார் திருமொழி.)
3. நான் *உன் பொன்னடிக்கீழே வளைப்பகம்.* ஷை (இங்ஙனே பெரிய வாச்சான்பிள்ளை வியாக்கியானம்.)

**2** அக்காரக்கனி—1. கடிகைத் தடங்குன்றின் மிசையிருந்த அக்காரக்கனி* திருக்கடிகைப் பெருமாள்
2. வேதவிமலர் விழுங்கு மென்னக்காரக்சனியே * என்ற திருவாய்மொழியின்படி எம்பெருமானுக்குப் பொதுத் திருநாமம்—போக்யதாதிஶயத்தைப்பற்றி.

**3** அங்கம்—1. உடல். *அங்கம்விட்டவை ஐந்துமகற்றி.*
2. வேதாங்கங்கள். *அங்கங்களவையாறு மிசைகளேழும்.* (*மாறன் பணித்த தமிழ்மறைக்கு மங்கையர் கோனறங்கங்கூற*

**4** அச்சோ-1. அணைத்துக்கொள். *எம்பெருமான்வாரா அச்சோவச்சோ.*
2. ஆச்சரியச் சொல். *அச்சோ வொருவரழகியவா.* (திருநாகைப்பதிகம்.)

**5** அசுரர், அரக்கர்-1. எம்பெருமானவதாரங்களில் மடிந்தவர்கள்.
2. கீதையில் செய்த தேவாஸுர விபாகத்தின்படி இற்றைக்குமுள்ள ஆஸுர ப்ரக்ருதிகள். (அரக்கரசுரர் பிறந்தீருள்ளீரேல்)

**6** அஞ்சு—1. பஞ்சபூதங்கள். *மஞ்சுசேர்வானெரி...அஞ்சு சேராக்கை.*
2. அஞ்சுதல் * அஞ்சுகுடிக்கொரு சந்ததி.* (எம்பெருமானுக்கு என் வருகிறதோவென்று அஞ்சுங்குடி — ஆழ்வார்கள் குடி.)

**7** அஞ்சேல்—1. அபயமளித்கல். *அஞ்சேலென்று கைகவியாய் *
2. ஈர்வனவேலும் அஞ்சேலும் * (அம் சேல்—அழகிய மீன்.)

**8** அடிகள்—1. திருவடிகள், *அடிகள் கைதொழுது.*
2. ஸ்வாமி. *நமரும் பெறலடிகள்.*

**9** அடை—1. இலை. *அடையார் கமலத்து.* அடைக்காய் திருத்தி.*
2. அடைந்திடு. *சாளக்கிராம மடை நெஞ்சே.*

**10** அட்டு—1. சமைத்து. *அட்டுக்குவி சோற்றுப் பருப்பதமும்*.
2. வதைத்து *மல்லரையட்டுமாள.*

**11** அணை—1. படுக்கை. *மெல்லணைமேல் முன் துயின்றாய்.*
2. ஸேது. *மலைகொண்டலை நீரணை கட்டி.*
3. அணைத்துக்கொள். *ஆறென்று நெஞ்சே! அணை.*

**12** அண்டர்—1. தேவர்கள். *அண்டர்கோனணியரங்கன்.*
2. இடையர். *அண்டர் மிண்டிப் புகுந்து*

**13** அத்தம்—1. ஹஸ்த நக்ஷத்ரம். *அத்தத்தின் பத்தாநாள்,*
2. ஹஸ்தம்—கை *நீண்ட அத்தக் கருமுகிலை.*
பெரிய திருமொழி 2-5-2 வியாக்கியானம் ஸேவிக்க.

**14** அத்தன்—1. ஸ்வாமி *அத்தனவந்தப்பூச்சிகாட்டுகின்றான்.*
2. தந்தை. *அத்தனாகி அன்னையாகி.*

**15** அந்தரம்—1. ஆகாசம். *அந்தரத்தமரர்கள் கூட்டங்களிவையோ.*
2. இடையூறு. *அந்தரமொன்றுமின்றி*

**16** அந்தாமம்—1. பரமபதம. *அந்தாமத்தன்புசெய்து.*
2. அழகிய ஒளியையுடைய. *அந்தாமவாண் முடிசங்கு*

**17** அந்தி—1. ஸந்தியாகாலம். *அந்தியம்போதிலரியுருவாகி*
2. ஸந்தியாவந்தனம். *அந்தியாலாம்பயனங்கென்?*
3. எல்லையான நிலைமை. *அந்திதொழுஞ்சொல்லுப்பெற்றேன்*

**18** அம்பு—1. சரம் (பாணம்). *அம்பன்னகண்ணாளசோதை.*
2. ஜலம். *அம்புலாவுமீனுமாகியாமையாகி.*

**19** அம்மா—1. குழந்தை தாயைவிளிப்பது—*அம்மாவென்றுகந்தழைக்கும்*
2. ஆணைநோக்கியும் அம்மாவென்பதுண்டு — *வாயால் முன்ன முன்னம மாற்றுதேயம்மா!* *பால்திணையிழுக்கினு மியல்பே.* (என்பது நன்னூல்.)
3. ஸ்வாமீ ! *வித்துவக்கோட்டம்மா !

**20** அமர்—1. யுத்தம். *அன்றங்கமர் வென்றுருப்பிணி*
2. அமர்வு. *அமர்ந்தநாதனை* *ஆலமமர்கண்டத்தரன்.

**21** அயலார்—*அயலாருமேசுகின்றதிதுவேகாணுமிந்தஊரீரே.*
(நாலயலார்)—*நாலயலாருமறிந்தொழிந்தார்.* [ஹ்ருதயே.
அயற்சேரியுள்ளாரும்—"உபாயசதுஷ்டயாந்தர்யாமித்வபரர்" ஆசார்ய

**22** அரசு—1. க்ஷத்ரியர்கள். *அரசு களைகட்ட அருந்தவத்தோன்.*
2. ராஜ்யம். *அரசமர்ந்தானடிசூடுமரசு.*
3. ஸாம்ராஜ்யம். *அரசாக வெண்ணேன் மற்றரசுதரனே.*

**23** அம்பரம்—1. ஆகாயம். „அம்பரமூடறுத்தோங்கி. ¤அம்பரமனல்கால்நிலம்*
2. வஸ்திரம். ¤அம்பரமே தண்ணீரே சோறேயறஞ்செய்யும்.„

**24** அரண் — 1. கோட்டை. * அரணமைந்த மதிள்சூழ் * [கோட்டையாக அமைந்த மதிள் என்றபடி.]
2. ரக்ஷகம். *இல்லை கண்டீர் அரணே¤எம்மையாள்வாரவரேயரண்

**25** அரவம் — 1. பாம்பு. ¤அரவத்தமளியினோடும்* „அரவப்பகையூர்தி*
2. ஒலி. „கலந்துபேசின பேச்சரவம் ¤தயிரரவம் கேட்டிலையோ*?

**26** அரி—1. சிங்கம். ¤அந்தியம்போதிலரியுருவாகி. „அரிகாண்நரியாய்*
2. பகைவன். „அரியையழித்தவனை...பல்லாண்டு.*
3. ஹரி. ¤மெள்ளவெழுந்தரியென்ற பேராவம். ¤அரியரியென்றவை*
4. குரங்கு. ¤மலையாலரிகுலம்பணிகொண்டலை கடலடைத்தான்.
5. வண்டு. ¤போதரிக்கண்ணினாய்—[பூவிற்படிந்த வண்டுபோன்ற.]
6. மான். *போதரிக்கண்ணினாய்—[ஸஞ்சரிக்கின்ற மானின்கண்.*]
7. அரிந்துபொகடுதல்—¤அரிசினத்தாலீன்றதாய்¤

**27** அலர்—1. மலர். ¤அடியிணைக்கீழலர்களிட்டு.¤ ¤அலரெடுத்தவுந்தியான்.*
2. பழி. ¤அலர்தூற்றிற்றது முதலாக்கொண்ட.¤

**28** அல்—1. இரவு. ¤அல்லுநன்பகலுமிடைவீடின்றி.
2. இருட்டு. ¤சந்தமல் குழலாள், ¤ ¤அஞ்சலோதியை¤
3. அல்லாதது. ¤அல்வழக்கொன்றுமில்லா¤ (வழக்கல்லாதது அநீதி)

**29** அல்லி-1. பூந்தாது. ¤அல்லியுந்தாது முதிர்ந்திட்டு¤
2. தாமரை. ¤அல்லிமாமலர் மங்கைநாதன் „அல்லிமலர்மகள்*
3 புறவிதழ். ¤அல்லியும் தாது முதிர்ந்திட்டு¤

**30** அவன்—1. பிரமன், சிவன், இந்திரன். „அவனே யவனுமவனுமவனும்*
(¤ஸ ப்ரஹ்மா ஸ சிவஸ் ஸேந்த்ர:¤என்ற புருஷஸூக்தச்சாயை.)

**31** அவா—1. ஆசை. ¤உன்னைக்காணுமவாவில் வீழ்ந்து
2. (அ(வ்)வா) அப்படியா ? அப்படியில்லையே என்று கருத்து.
¤யாமுமவா: (திருவிருத்தம்.)

**32** அளி—1. வண்டு. ¤தென்னவென்றளிகள் முரன்றிசை பாடும்*
2. அன்பு. ¤கடல்ஞாலத்தளிமிக்கான் கவராத

**33** அற—1. அறும்படி. ¤மயர்வற மதிநலம்¤ ¤வினைகளை வேரறப்பாய்ந்து¤
2. அற்றுத்தீரும்படி. ¤அறவிலை செய்தனன்*
3. மிகவும். *அறவினியன்¤ ¤அறப்பதறி¤
4. அற்பமாம்படி. ¤என்னவாவறச் சூழ்ந்தாயே¤

**34** அறு—1. இலலாத. ¤துயரறுசுடரடி¤ ¤மலமறுமதிசேர்¤
2. ஆறுவகைப்பட்ட. ¤அறுதொழிலந்தணர்¤. *அறுசுவையடிசில்¤

**35** அனந்தன்—1. ஆதிசேஷன். *அனந்தன்பாலும் கருடன்பாலும்*
2. எம்பெருமான். *ஆரமார்பனரங்கனனந்தன்*

**36** ஆ—1. பசு. ஆவினையன்றுய்யக்கொண்ட*
2. ஹா. (தமிழில் ஹகாரம் கிடையாதாதலால் (ஹா) என்பது ஆ வெனத் திரியும். ஹாஹா—*ஆவாவென்றருள்செய்து*
3. பிரகாரம். *போதருமாபோலே.*

**37** ஆகம்—1. உடல். *ஆகஞ்சேர் நரசிங்கமதாகி*
2. மார்பு *ஆகம்வள்ளுகிரால் பிளந்தான்*

**38** ஆசை—1. ஹேயவிஷயத்திலாசை. *ஆசைவாய்ச்சென்ற.*
2. ஸ்த்விஷயத்திலாசை. *ஆசைவழுவாதேத்துமெமக்கு*

**39** ஆடு—1...*அணங்குக்கருமருந்தென்று. அங்கோராடுங்கள்ளும்பராய்*
2. வெற்றி. *அரக்கராடழைப்பாரில்லை.* (வியாக்கியானம் ஸேவிக்க.)
3. நடனஞ்செய்தல். *அடியாருடன் நெஞ்சேயாடு* *வேங்கடத்தாடு கூத்தன்.*
4. அசைதல். *ஆடுவான் கொடியகல்விசும்பணவி.*

**40** ஆடி—1. ஆடியாடியசைந்தசைந்து.* *ஆடியாடியகங்கரைந்து*
2. *இன்றேதிருவாடிப்பூரம்.*

**41** ஆணை—1. கட்டளை. *ஆணையாயிரத்து *ஆணைமெய்பெறநடாய*
2. ஒட்டிடுதல். *திருவாணை நின்னாணை*
3. ஆண்பிள்ளையை. *அடலேற்றினைப் பெண்ணையாணை.*

**42** ஆதி—1. முதல்வன். *ஆதியானவாதி* அமலனாதிபிரான்.*
2. ஆகின்றாய். *ஒரண்டமாதியாதலால்*

**43** ஆம்பல்—1. ஆம்பல் மலர். *ஆம்பல்வாய் கூம்பினகாண்.*
2. புல்லாங்குழல். *ஆயன்வாயாம்பற்கழியுமாலென்னுள்ளம்.*

**44** ஆய—1. சிறந்ததான. *ஆயபொன்மாமதிள்சூழ்ந்து*
2. கோபாலனே! *ஆயவெனக்கொருகால் * ஆயநின்னையாவர்?*

**45** ஆய்—1. ஆகி. *அன்னையாய் அத்தனாய் * நீராய் நிலனாய்*
2. இடைச்சாதி. *ஆய்க்குலமாய்வந்து தோன்றிற்று*

**46** ஆரம்—1. ஹாரம். *ஆரமார்பனரங்கன். *ஆரங்கெடப் பரனன்பர் கொள்ளார்.*
2. சந்தனம். *ஆரப்பொழில் தென்குருகைப்பிரான்.*

**47** ஆரார்—1. திருப்தியடையார். *கேட்டாரார் வானவர்கள் செவிக்கினிய*
2. யார்யார்?—*ஆராரிவற்றினிடை * ஆராரெனச்சொல்லி*

**48** ஆராவமுது—1. திருக்குடந்தைப் பெருமாள்.
2. அத்யாபகஸ்வாமிகள். *வைகல் பாடவல்லார் வானோர்க் காராவமுதே*

**49** ஆலம்—1. ஹாலாஹலம் (விஷம்) ☼ஆலமமர்கண்டத்தரன்
2. ஆலமரம். ☼ஆலம்பேரிலையன்னவசஞ்செய்யும்☼

**50** ஆலி—1. திருவாலி. *ஆலிங்கர்க்கதிபதியே! * தென்னலிமேயானை☼
2. நீர்த்துளி. *ஆலிமாமுகிலதிர்தர* *ஆலிவந்ததாலரிதுகாவலே*

**51** ஆல்—1. ஆலமரம். ☼ஆலன்றுவேலைநீருள்ளதோ?☼
2. (அசை) ☼வாராதால்☼
3. ஆதலால். ☼மதிநிறைந்த நன்னாளால்☼

**52** ஆவி—1. உயிர். ☼ஆவி மூக்கினில் சோதித்த பின்னை☼
2. தேஹம். ☼ஆவிசேருயிரினுள்ளால்☼

**53** ஆழி—1. கம்பீரத்தன்மை. ☼ஆழிமழைக் கண்ணா!☼
2 கடல். ☼ஆழி சூழிலங்கை☼ ஆழியுள்புக்கு
3 சக்கரம். ☼ஆழியொடும் பொன்னார் சார்ங்கமுடைய☼
4. மண்டலாகாரம் ☼ஆழிதிகழ்திருச் சக்கரத்தின்☼
5. ஸூரியன். ☼ஆழியாலன்றங்காழியைமறைத்தான்☼

**54** ஆழ்வார்—1. ☼ஆழ்வார்கள்வாழி☼
2. அதோகதியையடைவர். ☼ஆசைப்பட்டாழ்வார் பலர்☼

**55** ஆளும்—1. ஆட்செய்தல். ஆட்கொள்ளுதல். ☼என்னையாளும் பிரானார்
2 வசப்படுத்திக்கொள்ளுதல். ☼என்னையாளுப் வன்கோ☼

**56** ஆறு—1. 6 லக்கம் ☼ஆறுமாறுமாறுமாய் ☼
2. வகை ☼அமாறு அறியும் பிரானே!☼
3. உபாயம் ☼ஆறெனக்கு நின்பாதமே☼
4. நதி ☼கடிசிநடுங்கி யெமுனையாற்றில்☼

**57** ஆற்ற—1. மிகவும். ☼ஆற்றவனந்தலுடையாய் ☼ பெரும்பசுக்களாற்ற☼
2. ஸாத்மிக்கஸாத்மிக்க. ☼ஆற்றநல்லவகைகாட்டுமம்மான்☼

**58** ஆனாய்—1. யானையே! ☼தென்னானாய் வடவானாய் குடபாலானாய்!☼
2. ஆனவனே. ☼இமையோர்க்கென்றும் முன்னானாய்☼
3. ஆய்விட்டாய் ☼முதலானாயே☼

**59** இகல்—1. மாறுபாடு. ☼இகல் கொள்புள்ளைப்பிளந்ததும்☼
2. குறை. ☼எனக்கென்ன இகலுளதே☼

**60** இசை—1. ஸ்வரம். ☼இசைகொள்வேதநூல்☼
2 ரீங்காரம். ☼தேதெனவென்றிசை பாடும்☼

**61** இப்போது—1. இன்று. ☼இப்போதென்னெஞ்சினுள்ளே☼
2. இந்தப்போதை, என்னினைந்து போக்குவரிப்போது

**62** இரு—1. ☼கோலஞ்செய்திங்கேயிரு☼
2. ☼இருபிளவாய்ப் போகாதே
3. விசாலம். ☼இருநிலமன்னர் தம்மை ☼ இருமலர்த்தவிசில்☼

**63** இருள்—1. வெளியிருள். ¤இருள் நாள் பிறந்தவம்மான்¤
2. அகவிருள். ¤இருள்தருமாஞாலத்துள்¤

**64** இலை—1. ¤இலையார் மலர்ப்பூம்பொய்கை¤ தின்னும் வெற்றிலையுமெல்லாம்*
2. ஒத்தார்மிக்காரை யிலையாய¤இலை துணைமற்றென்னெஞ்சே¤

**65** இல்—1. க்ருஹம். ¤இல்லறமல்லேல்¤ 2 நல்ல குடி. ¤இற்பிறப்பறியீர்*
3. இல்லாமை. குற்றமில்சீர் ¤ பொய்யில் பாடலாயிரம்¤
4. இல்லை ¤ஏதிலராய் மெய்ஞ்ஞானமில் ¤ அதனேர் நிறையில்லே*

**66** இறை—1. ஸ்வாமி. ¤இறையெம்பெருமானருளென்று¤இல்லைகாண்மற்றோ [ரிறை¤
2. க்ஷணகாலம். ¤இறைப்பொழுதுமெண்ணோமே¤
¤அகலகில்லேனிறையும்¤
3. கப்பம். ¤இறுக்குமிறையிறுத்துண்ண¤

**67** இனம்—1. ஒப்பு ¤இனமேதுமிலானை¤
2. கூட்டம் ¤வண்டினமுரலுஞ்சோலை¤
3. இன்னமும் ¤அகல்வது வோவிதியினமே¤

**68** இன்று—1. இன்றைக்கு ¤இன்று வந்தித்தனையும் ¤ இன்றுக¤
2. ¤இன்று யாம்வந்தோமிரங்கு¤ என்ற விடத்தில் ஒரு விசேஷம் குறிக்கொள்ளவேணும். இங்கு இன்று என்பது சொல்வடிவமானாலும் "உயிர்வரினுக்குறள் மெய்விட்டோடும், யவ்வரினிய்யாம்¤ என்ற நன்னூற் சூத்திர விதிப்படி 'இன்றியாம்' என்றாகும். இன்றி—வேறு புகலின்றி என்னும் பொருளாம்.

**69** ஈ—1. அற்பஜந்து ¤ஈயினுலரிப்புண்டுமயங்கி¤
2. கொடு அருளை யீயென்னம்மானே யென்னும்¤

**70** ஈசன்—1. ஸர்வேச்வரன் ¤ஈசன் பாவோர் அவன்பறைதல்¤
2. உருத்திரன் ¤ஈசனை வென்றசிலைகொண்ட¤
¤ஈசற்கும் நான்முகற்குந்தெய்வம்.

**71** ஈடு—1. தேஹபலம் ¤ஈடும்வலியுமுடைய விந்நம்பி¤
2. தள்ளிவிடுதல் ¤ஈடுமெடுப்புமிலீசன்¤
3. ஒப்பானது ¤அதுவே ஆட்செய்யுமீடே¤
4. ¤ஈடு முப்பத்தாறுபிரம்¤

**72** ஈண்டு—1. திரண்டு ¤ஈண்டுபல்யோனிகள்தோறுழல்வோம்.
2. இப்பொழுது ¤ஈண்டிதுரைக்கும்படியையந்தோ¤

**73** ஈர்—1. இரண்டு ¤ஈரிரண்டுமுகமுங்கொண்டு¤ ஈரிரண்டுமால்வரைத்தோள்
2. வருத்துதல் ¤ஈர்தியாலோ¤ ஈர்கின்ற குணங்களையுடையாய்¤

**74** உடையாய்—1. ஸ்வாமிந்! ¤உடையாயமேலமேல்¤
2. உடையவனே! ¤தண்திருவேங்கடமுடையாய்
¤உலகம் மூன்றுடையாய்¤

**75** உடை—1. வஸ்த்ரம். ☼உண்டியே உடையே உகந்தோடும்☼
2. உடைத்தான. ☼பல்சலன் தானுடை யெப் பெருமான்☼
3. உடைதல். ☼உடைந்து நோய்களையோடுவிக்கும்☼
4. உடைத்தல். ☼உறிச்சியுடைத்திட்டுப்போந்து நின்றான்☼

**76** உடைத்து—1. பங்கம் செய்து ☼ஆடல் நன்மாவுடைத்து☼
2. உடையது. ☼மானமுடைத்துங்களாயர் குலம்☼

**77** உணு—1. உணவு. ☼அவியுணுமறந்து வானவரெல்லாம்☼
2. உள் நா. ☼செவியுணுவின் சுவை☼ (செவியுள் நா.)

**78** உண்டி—1. உணவு. ☼உண்டியே உடையே உகந்தோடும்☼
2. உண்கிறாய். ☼ஆனைமேய்த்தி ஆனெய் உண்டி☼

**79** உண்டு—1. உளது. ☼ஒன்றுண்டு செங்கண்மால்யானுரைப்பது☼
2. புஜித்து. ☼உண்டுலகேழினையுமொருபாலகன்☼

**80** உண்டே—1. நிச்சயமாகவுளது. ☼உண்டே விசும்பு☼
2. (இப்படியும்) உண்டோ? ☼ஈதொப்பதோர் மாயமுண்டே?*
☼மற்றுமோர் தெய்வமுண்டே?*

**81** உயர்வு—1. மேன்மை. ☼உயர்வறவுயர்நலம்☼ ☼பிறந்தாருயர்ந்தே☼
2 சிரமம். ☼உயர்வறவுயர்நல மென்றவிடத்திலே ஈடு ஸேவிக்க.

**82** உரம்—1. மார்பு. ☼உரம்பற்றியிரணியனை☼
2. வலிமை. ☼உரம்பெற்ற மலர்க்கமலம்☼

**83** உலகு—1 லோகம். *இவைபொன்னவுலகியற்கை ☼ உலகுதன்னைவாழநின்ற*
2. சாஸ்த்ரம். *எல்லீரும் வீடுபெற்றாலுலகில்லை யென்றே*

**84** ஊரார்—1. ஊரிலுள்ளவர்கள். ☼ஊரரிலுமிராதொழியேன் நான்☼
2. ஊரமாட்டார்கள். ☼மன்னுமடலூராரென்பதோர்வாசகமும்*

**85** ஊரான்—1. திவ்யதேசமுடையவன். ☼ திருக்கண்காலூரான் ☼ ☼ அத்தி யூரான்☼ ☼திருக்கோட்டியூரான்☼
2. ஊரகத்தான். ☼ஊரான் குடந்தையுத்தமன்☼

**86** ஊரும்—1. கிராமமும். ☼ஊரும் நாடுமுலகமுந்தன்னைப்போல்☼
2. ஊர்கின்ற. ☼ஊரும்வரியரவமொண்குறவர்☼

**87** எண்—1. சிந்தனை. ☼ஓரெண்தானுமின்றியேவந்து☼
2. எண்ணிக்கை. ☼எட்டுத்திசையுமெண்ணிறந்தபெருந்தேவிமார் *

**88** என்—1. என்னுடைய. ☼என்மகன் கோவிந்தன்☼
2. என்னே! *இதுவென்புகுந்ததிங்கந்தோ! * ஏதுக்கிதுவென்?☼

**89** என்று—1. இவ்விதமாக. *வாவென்று சொல்லி*
2. என்றைக்கு? *எம்மைநோக்குவதென்றுகொலோ?*

**90** என்றும்—1. என்று சொல்லியும். *அமுதென்றும் தேனென்றும்*
2. என்றைக்கும்? *என்றுமென்னையாளுடை*என்றுமுன்தனக்கு*

**91** என்னும்—1. என்கிருள். *கடல்ஞாலஞ்செய்தேனும் யானேயென்னும்*
2. என்கிற. 'என்திருமகள்சேர்மார்பனேயென்னுமென்னுடை'

**92** ஏடு—1. அஸாரம் *ஏடு நிலத்திலிடுவதன்முன்னம்*
2. ஓலையேடு. *ஏடேறு பெருஞ் செல்வத்து*

**93** ஐ—1. கோழை. *ஐக்கள்போதவுந்த* *ஐயார்கண்டமடைக்கிலும்*
2. ஐவகைப்பட்ட. * ஐவேள்வியோடாறங்கம் * *ஐம்பெரும் பூதமும்*

**94** ஐயம்—1. சந்தேஹம். *ஐயமொன்றில்லையரக்கர்*
2. யோக்யர்களுக்கிடுவது. *ஐயமும் பிச்சையும்*

**95** ஐவர்—1. பஞ்சபாண்டவர். *ஐவர் தூதனாய் * ஐவர்கட்காகி*
2. பஞ்சேந்திரியங்கள். *உடனின்றைவரென்னுள்புகுந்து*

**96** ஓசை—1. தொனி. *வெறுங்கலத்தை வெற்பிடையிட்டதனோசைகேட்கும்*
2. புகழ். *மல்லரையுமுடையவிட்டோசைகேட்டான்*

**97** ஓதி—1. அத்யயனம் செய்து. *ஓதியோதுவித்தாதியாய்வரும்*
2. தலைமயிர். *அஞ்சலோதியைக் கொண்டு நடமின்*

**98** ஓர்—1. ஒன்று. *ஓரடியும்சாடுதைத்த * ஓருருவம்பொன்னுருவம்*
2. அறிந்துகொள். *உள்ளத்தினுள்ளானென்றோர்*

**99** ஓவி—1. ஓய்ந்து. (இல்லாமல்) *படியோவிநிகழ்கின்ற*
2. ஓவியம். *ஓவிநல்லாரெழுதிய தாமரையன்ன*

**100** ஓவுதலின்றி—1. ஓயாமல். *ஓவுதலின்றியுலகம் மூன்றளந்தான்*
2. ஓய்வில்லாமையினால். *ஓவுதலின்றியுன்கழல வணங்கிற்றிலேன்*

மற்றும் விட்டுப்போனசொற்களும் மெய்யெழுத்தாதியானசொற்களும் பிறகுவரும்.

## மற்றொரு விருந்து

நமது சொற்பொருள் விருந்தை இதுவரை ஒருவாறு அநுபவித்தீர்கள்; இனி மற்றொருவகையாகவும் அநுபவிக்க ப்ராப்தமாகிறது. (அதாவது)—ஒரு சொல்லுக்குப் பல பொருள்கள் ஏற்படுவதானது கீழேகண்ட விதமாக; அங்ஙனன்றி இடையினரகரம் வல்லினறகரம் என்கிற வாசியினாலுமாகும். [இரந்தான்—இறந்தான் இத்யாதிகள் காண்க.] அருளிச் செயலை ஸேவிக்கும்போது, காற்று, கூற்று என்று ஸேவிக்காமல், காத்து, கூத்து என்றே ஸேவிக்க வேணுமென்றும், பன்றி, கன்றி என்று ஸேவிக்காமல் பன்னி, கன்னி என்றே ஸேவிக்கவேணுமென்றும் மேலையார் நியமித்து அங்ஙனமே ஸேவித்து வந்தாலும், காற்று காத்து, கூற்று கூத்து, பன்றி பன்னி, கன்றி கன்னி இத்யாதிகளான உண்மைச் சொல்வடிவங்களில் இயற்கையாகவே அர்த்தபேதம் இருக்கின்றதன்றோ. இவையெல்லாம் இனி அகராதி வரிசையிலேயே தெரிவிக்கப்படுகின்றன. முந்தின விருந்தைக் காட்டிலும் இந்த விருந்து மிக்க இனிமைபயக்கும்.

# ★ சொல்வடிவவேற்றுமையிற் பொருள் விளக்கம் ★

**1** அர, அற—(அர) அரவு. ✲குறியதன் கீழ் ஆக்குறுகலும், அதனோடு உகர மேற்றலும் இயல்புமாம் தூக்கின் ✲ என்ற நன்னூற் சூத்திரப்படி (அர) என்கிற சொல் வடிவமுமுண்டு.

(அற) 1. அறும்படி, அற்றவளவிலே, ✲மயர்வற✲ ✲மனனகமலமற✲
2. மிகவும். ✲அறவினியன் பற்றுமவர்க்கு. ✲அறப் பதறி✲

**2** அரா, அரு—✲நச்சராவணைக்கிடந்த✲ (அரு) விட்டுநீங்காத. ✲அந்தணளரரு✲ வையத்தேவாரு✲ அரு என்பதற்கு (ஜரியாது) என்கிற பொருளுமுள்ளது. ✲உண்ட முலைப்பாலரு கண்டாயுறங்காவிடில்✲

**3** அரி, அறி—(அரி) என்ற சொல்லின் பலபொருள்களை கீழே சொற்பொருள் விருந்திலிருந்து உணர்க.

(அறி) அறிந்துகொள். ✲அருநான்குமானையறி✲

**4** அரிய, அறிய—(அரிய) 1. அருமையான. ✲அரியவின்னிசைபாடும்✲
2. அறுத்துப்போகட. ✲தீவினையை முதலரியவல்லார்தாமே✲

(அறிய) ✲அறியக்கற்று வல்லார்வைட்டணவர். ✲நாமறியவாய்ப்பாடிவளர்ந்த நம்பி✲

**5** அரிவார், அறிவார்–(அரிவார்) அறுப்பவர்கள்.✲அரிவார்முகத்தெழுவாளை✲
(அறிவார்) அறிவிலேனுக்கருளாய் அறிவாருயிரானாய்✲

**6** அரிவை, அறிவை—(அரிவை) இளம்பெண் ✲ திவளும் வெண்மதிபோல் திருமுகத்தரிவை. ✲அரிவையருமபலர்✲.

(அறிவை) ✲அறிவையென்னுமமுதவாறு தலைப்பற்றி வாய்க்கொண்டதே✲

**7** அரிந்து, அறிந்து–(அரிந்து)✲மூக்கரிந்து✲. (அறிந்து)✲ஆரோதவல்லாரறிந்து

**8** அரு, அறு—1. (அரூபி). ✲உருவுமருவும்நீயே. 2. அருமையான. ✲அருங்கலமே! ✲அருமறைதந்தானே✲ (அறு) 1 அற்ற ✲ துயரறு சுடரடி ✲ மலமறுமதிசேர் ✲ (2) ஆறு வகைப்பட்ட. ✲அறுசுவையடிசில். ✲அறுதொழிலந்தணர்.✲

**9** அற்றம், அத்தம்—(அற்றம்) அறுதியீடு. ✲அற்றமுரைக்கின்றேன்.✲
(அத்தம்) கீழே சொற்பொருள் விருந்து காண்க.

**10** அற்ற, அத்த—(அற்ற) ✲அற்றபற்றர்சுற்றிவாழும்✲.
(அத்த!) ✲அத்த! நின்னடிமையல்லால்✲

**11** அன்றே, அன்னே—(அன்றே) ✲அன்றேவந்தடைந்தேன்✲
(அன்னே) ✲அன்னேயுன்னையறிந்துகொண்டேன்✲

12 ஆத்த, ஆற்ற—(ஆத்த) ✡ஆத்தனம்பிசெங்கணம்பி✡
(ஆற்ற) ✡கீழேசொற்பொருள் விருந்துகாண்க.

13 ஆரா, ஆரு—(ஆரா) ஆராவின்னமுதுண்ண ✡ ஆராவமுது✡
(ஆரு) ✡ ஆருமதயானையடர்த்தவன் தன்னை✡

14 ஆரும், ஆறும்—(ஆரும்) ஆருமறியாரவன் பெருமை✡
(ஆறும்) ஆறும்பிறையுமரவமும்✡ 2. ✡மேதினிநஞ்சுமை ஆறமெனத்துயர்விட்டு✡ [தொலையுமென்றபடி]

15 ஆரே, ஆறே—(ஆரே) ✡ஆரேயுலகத்தாற்றுவார்✡
(ஆறே) ✡அடியேன்விரித்துரைக்குமாறே✡

16 இரந்தால் இறந்தால்—(இரந்தால்) யாசித்தால—✡என்று மொருநாளொழியாமையானிரந்தால்
(இறந்தால்) மரணமடைந்தால். ✡இறந்தால் தங்குமூரண்டமே கண்டு கொண்மின்✡

17 இரந்து; இறந்து—(இரந்து) ✡இரந்துரைப்பதுண்டுவாழி✡
(இறந்து) ✡இவற்றுளெங்குங்கண்டுகோளிறந்துநின்ற✡

18 இரவு, இறவு—✡இரவுகூர்ந்திருள் ✡ அற்றையிரவுமோர்✡
[இறவு—முடிவு] ✡இறவுபடாமலிருந்த✡ (2) ஓர் மீன் வகை வெள்ளிறவுண்ணுங்குறுங்குடியே✡

19 இருக்கும், இறுக்கும்—(இருக்கும்) ✡இருந்தவூரிலிருக்குர் மானிடர்✡
(இறுக்கும்) ✡இறுக்குமிறையிறுத்துண்ண✡

20 இரை, இறை—(இரை) ✡புள்ளுப்பிள்ளைக்கிரைதேடும✡
(இறை) ✡இல்லைகாண்மற்றோரிறை

21 இன்றே, இன்னே—(இன்றே) ✡இன்றே நாங்காணுதிருப்பதுவும்✡
(இன்னே) ✡தண்மதியினிளவாடையின்னே✡

22 உரல், உறல்—(உரல்) ✡உரலினோடிணைந்திருந்து
(உறல்) ✡அவனதருளாலுறல்பொருட்டு

23 உரவு, உறவு—(உரவு) ✡உரவுநீர்ப்பொய்கை நாகங்காய்ந்ததும்
(உறவு) ✡உன்றன்னோடுறவேல் நமக்கு

24 உரி, உறி-(உரி.தோல்) உரியானையுகந்தான்✡மல்கியதோளும்மானுரியதளும்
(உறி) ✡உறியைமுற்றத்துருட்டி ✡ உறிமேலைத்தடாநிறைந்த✡

25 உரு, உறு—(உரு) ✡உருக்கடோறுமாவியாய்
(உறு) ✡உறுபெருஞ்செல்வமும் ✡ உறுபிணி✡

26 உரை, உறை—(உரை) ✡உரைகொளின்மொழியாளை✡
1. (உறை) ✡அலர்மேல்மங்கையுறைமார்பா✡
2. (கத்தியுறை) ✡உறைகொள்புகராழி சுரிசங்கம்✡

27 ஊரும், ஊறும்—(ஊரும்) ✡ஊரும்வரியரவம்✡ 2. ✡ஊரும் நாடும்✡
(ஊறும்) ✡அண்ணிக்குமமுதூறுமென்னாவுக்கே✡

**28** எரி, எறி—எரி—1. தீ. *தீதறுநிலத்தொடெரிகாலினொடு*
2. கேட்டை நக்ஷத்திரம். *எரியேய்பவளக்குன்றே*
எறி—விட்டெறிதல். *அறவெறிநாந்தகவாளே*

**29** எரியும், எறியும்—எரியும். *எரியுந் தீயோடசல்விசும்பும்*
எறியும். *எறியுந்தண்காற்றைத்தழுவி* *எறியுநீர்வெறி*

**30** என்றும், என்னும்—என்றும். 1. என்றுசொல்லியும். *அமுதென்றும்*
2. என்றைக்கும் *என்றுமென்னையாளுடை*
(என்னும்). *கீழே சொற்பொருள் விருந்து காண்க.

**31** ஏத்த, ஏற்ற—(ஏத்த) *ஏத்தவேழுலகுங்கொண்ட*
(ஏற்ற) *ஏற்றநோற்றேற்கு* *ஏற்றகலங்கள்*

**32** ஏத்தி, ஏற்றி—ஏத்தி—*ஏத்தி யுன் சேவடி* (துதித்து)
ஏற்றி—*மண்டலத்தூடேற்றிவைத்தேணிவாங்கி*

**33** ஏரி, ஏறி—ஏரி—*வனத்திடரை யேரியாம்வண்ணம்*
ஏறி—*மெத்தென்ற பஞ்சசயனத்தின் மேலேறி*

**34** ஒத்து, ஒற்று—(ஒத்து) *ஒத்திட்டிருந்தவா* *ஒத்துநின் றமூவுருவும்*
(ஒற்று) *கோயிற்பொறியாலே ஒற்றுண்டு நின்று*

**35** கரந்த, கறந்த—கரந்த. *கரந்தசிலிடந்தொறும்* கரந்து—*கரந்தெங்கும்*
கறந்த. *கறந்த நற்பாலும் தயிரும்* கறந்து — *பாலைக்
கறந்தடுப்பேற*

**36** கரி, கறி—கரி (1. யானை) *கலையுங்கரியும் பரிமாவும்*
(2. ஸாக்ஷி) *மார்க்கண்டேயனுங்கரியே* *கற்றைச்சடை
யான் கரிக்கண்டாய்*
கறி 1. *கறியுங்கலத்தகரிசியுமாக்கிவைத்தேன்*
2. மிளகு. *கறிவளர்கொடிதுன்னி*

**37** கரு, கறு—கரு *அன்று கருக்கோட்டியுள் கிடந்து கைதொழுதேன்*
*கருங்கண் தோகைமயிற்பீலி*
கறு—கறுவுதல். *கஞ்சன் கறுக்கொண்டு நின்மேல்*

**38** கருத்து, கறுத்து—(கருத்து) *என்றன் கருத்தையுற வீற்றிருந்தான்*
(கறுத்து) *கறுத்துக்கஞ்சனை யஞ்சமுனிந்தாய்* (சீறி).

**39** கரை, கறை—(கரை) *ஆற்றங்கரை வாழ்மரம்போல்*
(கறை) 1. *கறையார் நெடுவேல் மங்கையர்கோன்*
2. காசுங்கறையுடைக் கூறைக்கும்*
3. கறைகொண்ட கண்டத்தான்* (விஷம்).

**40** கன்றி, கன்னி—(கன்றி) *மங்கைவேந்தன் கலிகன்றி*
(கன்னி) *கன்னியரோடெங்கள் நம்பி*

**41** கற்று, கத்து—(கற்று) ☼குற்றமில் சீர் கற்றுவைகல்
(கத்து) ☼சாலே பொதத்திரிந்து கத்துவராய்☼

**42** காத்து, காற்று—(காத்து) ☼நாழிகை கூறிட்டுக் காத்துநின்ற☼
(காற்று) ☼காற்றில் சடியனுயோடியகம்புக்கு*

**43** கிரி, கிறி—(கிரி)-(மலே) ☼அறியாதிளங்கிரியென்றெண்ணி*
(கிறி) 1. நல்ல உபாயம். ☼கிறியென நினைமின்*
2. சூது. கிறிசெய்தென்னைப் புறக்கிட்டு*
3. பவளவடம். ☼கிங்கிணிகட்டிக்கிறிகட்டி☼

**44** குரங்கு, குறங்கு—(குரங்கு) ☼குரங்குகள் மலையை நூக்க☼
(குறங்கு) ☼குறங்குகளைவந்துசாணீரே☼
☼தந்தம்குறங்கிடையிருத்தி☼

**45** குரை, குறை—(குரை) 1. ஒலித்தல். ☼குரைசழல். ☼குரை கடலே*
(குறை) ☼குறையொன்றுமில்லாத கோவிந்தா!*

**46** கூரை, கூறை—(கூரை) ☼பாம்போடொருகூரையிலே பயின்றாற்போல்☼
(கூறை) ☼கூறை சோறிவை தந்தெனக்கருளி☼

**47** கூரிய, கூறிய—(கூரிய) கூர்மையான. *கூரிய மெய்ஞ்ஞானத்தால்☼
(கூறிய) 1. சொன்ன. ☼குழற்கோதை முன்கூறிய☼
2. சொன்னவற்றை. ☼கூறியகுற்றமாக்கொள்ளல் நீ*

**48** கூர்தல், கூறுதல்—(கூர்தல்) மிகுதல் ☼ஆங்கரும்பிக்கண்ணீர் சோர்ந்தன்பு கூருமடியவர்☼
(கூறுதல்) சொல்லுதல். ☼கூறுதல் வல்லாருளரேல்☼

**49** கூற்று, கூத்து—(கூற்று) யமன். ☼கொடுங்கஞ்சன் நெஞ்சினில் கூற்றே☼
(கூத்து) ☼கூத்தாடவல்லவெங்கோவே!☼ ☼என்றென்றே சில கூத்துச் சொல்ல☼ (க்ருத்ரிமவார்த்தை)

**50** சாறு, சார்—☼மதுரக்கொழுஞ்சாறு கொண்ட☼
☼சார்ந்த விருவல்வினைகளும் ☼சார்வு நமக்கென்றும்☼

**51** சிரை, சிறை—☼தலையைச் சிரைத்திட்டான் ☼காம்பறத் தலைசிரைத்து*
(சிறை) 1. அறுவர் தம் பிறவிபஞ்சிறையே☼ ☼சிறைசெய்த*
2. ☼அஞ்சிறையமடநாராய்☼ (சிறகு)

**52** சீரிய, சீறி—☼சீரிய நான்மறைச் செம்பொருள்☼ ☼சீறியருளாதே☼

**53** செத்து, செற்று—*செத்துப்போவதோர் போது நினைந்து☼
☼செற்றெழுந்து தீவிழித்து☼

**54** செரு, செறு—(செரு) யுத்தம். ☼செருச்செய்யுநாந்தகப்☼
(செறு) 1. ☼செறுவாரும் நட்பாகுவரென்று☼ (பகை)
2. பள்ளச்செறுவில் கயலுகள☼ (கழனி)

**55** சேறு, சேரு—*சேறுகொள் கரும்புக* சேருநல்ஒளஞ்சேர்*

**56** சேரும், சேறும்— என் திருமாலுக்குச் சேருமோ* புட்டியில் சேறும்*

**57** திரம், திறம்—(திரம்) ஸ் திரம். *இருநாட்டிலேறியுய்க்குமின்டம்(ஸ்)திரமாகா*
(திறம்) *பணியீரடியேன்திறமே* திறத்துக்சேதுப்பரவாய்*

**58** திரை, திறை—(திரை) அலை. *திரைச்கையாலடிவருடப்பள்ளிகொள்ளும்*
(திறை) கப்பம். *உய்ப்பின் திறைகொணர்ந்து*

**59** தேரும், தேறும்—*தேரும்போயிற்றுத்திசைகளும் மறைந்தன*
*சிந்திக்கும் திசைக்குத் தேறும் கைகூப்பும்*

**60** தேறு, தேர்தல்—(தேறு)தெளிதல் *தேறுநீர்ப்பம்பைவடபாலை*
(தேர்தல்–தேடுதல்)*அன்னமிரைதேரமுழ்ந்தூரெழுஞ்சுடரை*

**61** நரி, நறிய—(நரி) *கானிடைத் திரிவதோர் நரிபுகுந்து*
(நறிய) மணம்மிக்க. *நறிய நன்மலர் நாடி*

**62** நரை, நறை—(நரை) *முன்னெற்றி நரைத்தனபோல*
(நறை) நறுமணம். *நறைசெய்பொழில் மழைதவழும்*

**63** நாறு நார்—*நாறுநறும்பொழில்* *நாராரிண்டை நாண்மலர்*

**64** நிரை, நிறை—(நிரை–கூட்டம்) *ஆநிரை மேய்க்கநீபோதி*
(நிறை) 1. நிறைந்த. *மதிநிறைந்த* *நிறைந்தென்னுள்ளே*
2. அடக்கம். *நாணுநிறையுங்கவர்ந்து*

**65** நின்ன, நின்ற—(நின்ன—(உன்னுடைய) *நின்னபாதபங்கயம்*
*எந்நின்ற யோனியுமாய்* *நின்றவாறும்

**66** நீராய், நீறாய்—நீராய். *நீராய் நிலனாய்* *நீராயுருகுமென்னாவி*
நீறாய் (சாம்பலாகி) *கூறாய் நீறாய் நிலனாகி*

**67** நீரும், நீறும்—நீரும் 1. நீங்களும். *நீரும் நுஞ்சேவலுமாய்*
2. ஜலமும். *மண்ணும் நீருமெரியும்*
நீறும் *உடலம் நீறும் பூசியேறூருமிறையோன்*

**68** நெறு, நெருப்பு—*நெறுநெறெனவெறியவவர்*
*கஞ்சன் வயிற்றில் நெருப்பென்ன நின்ற*

**69** நெறிந்த, நெரிந்த—*நெறிந்தகருங்குழல்மடவாய்*
*நெரிந்தவேயின்முழையுள்நின்று*

**70** பத்தர், பற்றர்—*பத்தராகக்கூடும் பயிலுமினே* *அற்றபற்றர்*

**71** பத்தி, பற்றி—*பத்தியானபாசனம்* *கடைகயிறேபற்றிவாங்கி*

**72** பத்து, பற்று—பத்து-பக்தி. *பத்துடையடியவர்க்கு*
2. *பத்து நீண்முடியுமவற்றிரட்டி* (10 லக்கம்)
(பற்று) *அற்றிறைபற்றே*

**73** பரவை, பறவை—*பரவைத்திரைபல மோதப்பள்ளிகொள்கின்ற* (கடல்)
*பறவையேறுபரப்புருடா*

**74** பன்றி, பன்னி—*பன்றியாய்மீனாகியரியாய்*
*பன்னியுரைக்குங்காற்பாரதமாம்* *பன்னியுலகம் பரவியோவா*

**75** பாரை, பாறை—*பாரைப்படைத்துக்காத்துண்டுமிழ்ந்த*
*பக்கங்கருஞ்சிறுப்பாறைமீதே*

**76** பார்க்கடல் வண்ணன் / பாற்கடல்வண்ணன் — பார்க்கடல்-பார்சூழ்ந்தகடல். *பார்க்கடல் வண்ணனுக்கேபணிசெய்து* க்ஷீரஸாகரம். *பாற்கடல் யோகநித்திரை*

**77** புத்து, புற்று—*புத்தொடுசமணம்* *புத்தூர்க்கோன்* *புற்றரவல்குல்*

**78** புரம், புறம்—*புரங்கள்மூன்றுமோர் மாத்திரைப்போதில்*
*என்னைப்புறம்புல்குவான்* *போரவைத்தாய்புறமே*

**79** பெரும், பெறும்—*பெருங்கேழலார்தப்* *பெருஞ்செல்வப*
*பத்தராயிறந்தார் பெறும்பேற்றை* *பிறவிபெறுந்தனை*

**80** பொருப்பு, பொறுப்பு—*பொருப்பிடையே நின்றும்* (மலை)
*ஒன்றுமோர் பொறுப்பிலனாகி* (பொறுமை)

**81** மத்து, மற்று—*மத்துறு கடைவெண்ணெய்* *மத்தாகநாட்டி*
*மற்றெல்லாம் பேசிலும்* *மற்றுத்தொழுவார்*

**82** மரம், மறம்—*மரங்கெடநடந்தடர்த்து* *மரங்கள்போல் வலிய நெஞ்சம்*
*மறஞ்சுவர்மதிளெடுத்து* *மறந்திகழுமனமொழித்து*

**83** மரு, மறு—*மருவுந்தமனகமுஞ்சீர்* *திருமறுமார்பன்*

**84** மன்னு, மன்று—*மன்னுபுகழ்க்கௌசலைதன்* *மன்றில்மலிபுகழ்மங்கைமன்*

**85** மாத்து, மாற்று—(மாத்து-மத்தகத்தில்) *மாத்தமர்பாகன்வீழ*
1. *மற்றைநங்காமங்கள்மாற்று*
2. *மாச்சரியம்.* *மாற்றுரைமாற்றழிக்கவல்லானை*

**86** மாரி, மாறி—*மாரிமலை முழஞ்சில்* மாரிமாறாத தண்ணம்மலை*
*மாறிமாறிப் பலபிறப்பும் பிறந்து*

**87** மாறன், மாரன்-(மாறன்) *மாறன்சடகோபன்*நெடுமாறன்தென்கூடல்*
(மாரன்) மாரன்-மன்மதன். *மாரனார்வரிவெஞ்சிலைக்கு*

**88** வரு, வறு—*வருதேவர் மற்றுளரென்று* *மன்னும் வறுநிலத்து வாளாங்கு*

**89** விரல், விறல்—*எங்கும் பத்து விரலும்* *விரலோடு வாய் தோய்ந்த*
*விறல்வாணன் வியந்தோள்* *விறலிருஞ்சினத்தனவேழங்கள்*

**90** வேராகவே, வேறாகவே—*மாறன் சொல் வேராகவே விளையும் வீடு*
*வேறாக ஏத்தியிருப்பாரை வெல்லுமே*

---

குறிப்பு:—முந்தின விருந்திலும் இந்த விளக்கத்திலும் ஆழ்ந்துநோக்கினால் இருவகுப்புகளிலும் இன்னுஞ்சில சொற்கள் சேர்க்க வேண்டியிருக்கும். (தொடரும்)

—ஸ்ரீரஸ்து—

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்
ஆழ்வாரெம்பெருமானுர் ஜீயர் திருவடிகளே சரணம்

அடியேனுடைய எண்பத்தைந்து பிராயப் பூர்த்தியின் நினைவுமலரான

# எண்பத்தைந்து வார்த்தாமாலை P. B. A.

(இடையிடையே ஆப்தர்களினுடையவும் மஹநீயர்களினுடையவும் திருவுருவப் படங்கள் திகழ்வது இதில் முக்கியமானது.)

— முன்னுரை —



அன்பர்காள்! இந்த வார்த்தாமாலைக்குப் பரஸ்பரம் ஸங்கதி யொன்றுங் கிடையாது. நினைவுக்கு வரும் விஷயங்களைப் பண்டிதர்களை நோக்கியும் ஆஸ்திகர்களை நோக்கியும் பால யுவ பக்தர்களை நோக்கியும் எழுதிப்போருகின்றேன்.

**1**. அவரவர் தாம் தாம் கற்ற கல்விகளை இதரபண்டிதர்கள் கண்டு மகிழ்ந்து புகழ்ந்தாலொழிய கல்வி கற்றவர்கள் தாங்கள் திருப்தியடையமாட்டார்கள் என்பது பெரும்பாலும் உலகர் சொல்லக்கூடிய வார்த்தை. காளிதாஸ மஹாகவி சாகுந்தலநாடகத்தில் *ஆபரிதோஷாத்விதுஷாம்* என்ற வொரு சுலோகத்தினல் இதனைத் தெரிவித்துள்ளார். இது சிலவிஷயங்களில் பொருத்தமாகும். அவரவர்கள் தாம் தாம் பரிச்ரமப்பட்டுப் படித்துப் பெற்றிருக்கும் ஞானத்தைப் பிறர் உள்ளபடியறிந்து கொள்ள முடியாத; மருள் (ப்ரமம்) என்பது அனைவர்க்கும் ஸஹஜமாகையாலே அதனுல் அல்பஜ்ஞர்களை பஹுஜ்ஞர்களாகவும் க்ரஹித்துவிடக்கூடும். எவரும் பிறரைவஞ்சித்துவிடக்கூடுமாளுலும் ஸ்வாத்மாவை வஞ்சிக்க முடியாதாகையாலே தம்தம் யோக்யதையைத் தாம் தாம் உள்ளபடியறிந்து உகந்து கொள்ளவேணும். பிறரும் மனமுவந்து கொண்டாடவேணும்; தாம் தம் அறிவை உள்ளபடி அறிந்திருக்கவேணும்.

**2**. யசோதைப்பிராட்டிக்கு இரண்டுவிதமான கொண்டாட்டமுங் கிடைத்தது; அவள் தான் கண்ணபிரானை நோக்கிச் சொல்லுகிருள்—*உன்னைக்கண்டார் என்ன நோன்பு நோற்ருள் கொலோ! இவனைப் பெற்றவயிறுடையாள் என்னும் வார்த்தை யெய்துவித்த இருடீகேசா!* என்று. இவ்வளவோடு நிற்கவில்லை; மேலே *காலிப்பின்னே வருகின்ற கடல்வண்ணன் வேடத்தை வந்து காணீர்! ஞாலத்துப் புத்திரனைப் பெற்ருர் நங்கைமீர்! நானே மற்ருருமில்லை* என்றும் சொல்லிக் கொண்டாள். ஆத்ம த்ருப்தியே மிக முக்கியமானது.



திருவரங்கம் பெரிய கோயிலில் ஸமீப காலத்தில் ஆஸ்தானமலங்கரித்தருளின ஸ்ரீமத்பரமஹம்ஸ. ஸ்ரீரங்க நாராயண ஜீயர் ஸ்வாமி. வலது பக்கத்தில் ஸ்ரீமதுபயவே. வேதவியாஸ பட்டர். இடதுபக்கத்தில் ஸ்ரீமதுபயவே. நாதமுனியரையர். ஸ்ரீ ரங்கராஜஸ்தவத்தில் "ஸ்ரீ ரங்க பால நகர்மடா:" என்றபடியே கோயிலைக் காக்கும் மஹான்களிவர்கள்.

**3**. ஸ்வல்பயோக்யதை பெற்றவர்கள் பிறரை வஞ்சிக்கப் பொய்யான விருதுகளை யேறிட்டுக்கொண்டு சில பொய்யுரைகளையுஞ் சொல்லி அட்டஹாஸங்கள் செய்வதுமுண்டு. அன்னவர்களின் வஞ்சனை நீண்டகாலம் ஜீவிக்கமாட்டாது. 'கெட்டிக்காரன் புளுகு எட்டுநாளிலே' என்றொரு வசனமுள்ளது. பொய்யான பிரசாரங்களினுல் வஞ்சகமாகக் காட்டிக்கொள்ளும் பாண்டித்யம் பயன்படாது ஆத்ம ஸாக்ஷிகமான யோக்யதைதான் ஆத்மானந்த ஹேதுவாகும். அன்னவர்களைக் காண்பதரிது; அவர்களிடத்தில் ஆடம்பரமொன்றும் காண நேராது.

**4**. "கற்றது கைம்மண்ணளவு, கல்லாதது மலையளவு" என்பர் பெரியார். பலபலவும் கற்றவர்களென்று பேர்பெற்றவர்களும் கற்கவேண்டியவற்றில் ஏதோ சிறிது கற்றவர்களேயொழிய, பூர்த்தியாகக் கற்றவர்களல்லர்; இன்னமும் மலைமலையாகக் கற்கவேண்டியவையுள்ளன—என்பது இப்பழமொழியின் கருத்து. உண்மையில், கல்விக்கடலென்று பேர்பெற்றவர்களும் கற்றகல்விகள் கைமண்ணளவேயாம்.

**5** தைத்திரீய யஜுர் ப்ராஹ்மணத்தில் காடகத்தின் முதல் ப்ரச்நத்தில் *பரத்வாஜோ ஹ த்ரிபி ராயுர்ப்பிர் ப்ரஹ்மசர்ய முவாஸ: என்று தொடங்கி ஓதப்பட்டுள்ள பரத்வாஜோபாக்கியானத்தைக் கொண்டுதான் "கற்றது கைமண்ணளவு, கல்லாதது மலையளவு" என்கிற பழமொழி விளைந்தது.

**6**. அந்த உபாக்கியான மெங்ஙனேயென்னில், பரத்வாஜ முனிவர் தேவேந்திரனது அநுக்ரஹத்தினுல் முந்நூறு பிராயம் ஜீவித்திருக்கும் வரப்பெற்று மூன்று வேதங்களையும் ஓதிமுடித்தாராம். முந்நூறுவது பிராயம் முடியுமளவில் இந்திரன் வந்து இன்னுமொரு நூறு பிராயவாழ்ச்சி வரமளிப்பதாகக் கூறி, அந்த ஆயுளில் என்ன செய்வதாக உத்தேசிக்கிறீர்? என்றுகேட்க, வேதமே ஓதக்கடவே னென்று முனிவர் கூற, அப்போது இ ந் தி ர ன் அபூர்வமான மூன்று மலைகளைக் காட்டி, அவற்றிலிருந்து மூன்று முஷ்டி மண்ணையெடுத்து 'முனிவரே! நீர் முந்நூறு பிராயம் ஓதின வேதம் இந்த மூன்று முஷ்டிமண்ணளவேகாணும்; நீர் ஓதாதவை இம் மலைகளினளவாம்' என்றானும். இந்த உபாக்கியானத்திலிருந்தே "கற்றது கைம்மண்ணளவு, கல்லாதது மலையளவு" என்கிற பழமொழி தோன்றிற்று.



ஸ்ரீமதுபயவே. நியாயவேதாந்த வித்வான். திருமலை. அனந்தாண்பிள்ளை. அக்காரக்கனி. ஸம்பத்குமாராசாரியர் ஸ்வாமி, M. A., (திருநாராயணபுரம்)

ஆயுஷ்மாந். ஸ்ரீமான். தி. அ. அக்காரக்கனி அனந்தாழ்வான். (P. B. A. தௌஹித்ரன்) க்ரந்தமாலா கார்யாலயாத்யக்ஷ:

**7**. அதன்பிறகு பரத்வாஜ முனிவர் என்ன செய்தார்? தெரியுமோ? இந்திரன் முனிவரைநோக்கிக் கூறினன்—[*ஏஹீமம் வித்தி. அயம் வை ஸர்வ வித்யேதிக. தஸ்மா ஏதம் ஸாவித்ர முவாச*] இந்திரன் முனிவர்க்கு ஸாவித்ர வித்யையை உபதேசித்து "இதை நீர் ஓதினீராகில் எல்லா வித்யைகளையும் ஓதினவரா்வீர்; ஸர்வ வித்யையும் இதுதான்" என்று சொல்லிச் சென்றனன்.

**8**. அந்த ஸாவித்ர வித்யை யென்பது எது தெரியுமோ? ஸவிதா என்று ஸூர்யனுக்குப் பெயர். ஸூர்யனை தேவதையாகவுடைய வித்யை ஸாவித்ர வித்யா. வகுளபூஷண பாஸ்கரரென்று ப்ரஸித்தரான நம்மாழ்வார் தாம் அந்த ஸூர்யன். அவருடைய வித்யை — திருவாய்மொழி யெனப்படுவது. இதை ஓதினல் "ஸர்வ வித்யைகளையும் ஓதினவாரும். ஆகவே தான் திருவாய்மொழிக்குத் தனியனிட்டருளின ஸ்ரீமந்நாதமுனிகள் *பக்தாம்ருதம் விச்வஜநாநுமோதநம்* என்பதில் *ஸர்வார்த்ததம்* என்று திருவாய்மொழிக்கு விசேஷணமிட்டருளினர்.

**9**. திருவாய்மொழி யருளிய நம்மாழ்வாரைப் பின்புள்ளார் வகுளபூஷண பாஸ்கரரென்று பேசியுள்ளது தவிர, ஆழ்வார் தாமே தம்மை ஸூரியனாக ஒரு பாசுரத்தில் அருளிச்செய்துள்ளார். அதை அடியேன் மேலே எழுதவேபோகிறேன். வாசகர்கள் அதைக் கடாக்ஷிப்பதற்கு முன்னே (திருவாய்மொழி யோதினவர்கள்) தாங்களே ஆலோசித்து அறிந்துகொள்ளும்படி பிரார்த்திக்கிறேன்.

[ஆலோசிக்க அவகாசமளிக்கிறேன்.]

... ... ... ... ...

**10**. அந்தணர்கள் ஸந்த்யாவந்தனம் அனுஷ்டித்துத் தலைக்கட்டும்போது ஒருச்லோக மநுஸந்திப்பதுண்டே; (அதாவது) *த்யேயஸ் ஸதா ஸவித்ருமண்டல மத்யவர்த்தீ நாராயணஸ் ஸரஸிஜாஸந ஸந்நிவிஷ்ட:, கேயூரவாந் மகரகுண்டலவாந் கிரீடீ ஹாரீ ஹிரண்மயவபுர் த்ருதசங்கசக்ர:* என்பதாம். ஸூர்யமண்டலத்தில் நாராயணன் எங்ஙனே யுள்ளானென்பதை இந்த சுலோகத்தினலறிகிறோம். எங்ஙனே யறிகிறோம்? மகரகுண்டலமணிந்து கிரீடதாரியாய் ஸர்வாபரணபூஷித



எம்பெருமானார் ஸ்ரீகாஞ்சீ புரியில் பெரியநம்பிகளோடு கூடிச்சிலகாலம் வாழ்ந்துவந் தாரென்பது குருபரம்பராப்ர பாவஸித்தம அப்பொழுது வாழ்ந்த திருமாளிகை இப் பொழுதும் உடையவர் திரு மாளிகையென்று ப்ரஸித்த மாய்த் திகழ்ந்துவருகின்றது. அதற்கு இப்பொழுது ஜீர் ணோத்தாரம் நடந்து வருகின் றது நெடுநாளாக அங்குச் சுவரில்சித்திர ரூபமாக எழுந் தருளி யிருக்கும் எம்பெரு மானாரும். கூரத்தாழ்வானும் முதலியாண்டானும் இங்கு ஸேவைஸாதிக்கிறார்கள்.

ணுய் ஸர்வாயுதோபேதனு யிருப்பதாக அறிகிறோம். திருவாய்மொழியில் (8-8-1) *கண்கள் சிவந்து பெரியவாய் வாயுஞ்சிவந்து கனிந்துள்ளே, வெண்டலிலகு சுடரி லகு விலகுமகரகுண்டலத்தன், கொண்டல் வண்ணன் சுடர் முடியன் நான்கு தோளன் குனிசார்ங்கன், ஒண்சங்கதை வாளாழியானொருவனடியேனுள்ளானே* என்கிற பாசுரத்தினல் ஆழ்வார் தம்முள்ளே எம்பெருமான் இங்ஙனே யெழுந்தருளி யிருப்பதாக வருளிச்செய்தது தம்மை ஸூர்யனுகக் காட்டினபடியன்றோ

**11**. சுலோகத்திலுள்ளதை ஒன்றுமட்டுப் மாற்றினாராழ்வார். (அதாவது) சுலோகத்தில் ¤ஹிரண்மயவபு:¤ என்றுள்ளது; பாசுரத்தில் ¤கொண்டல்வண்ணன்* என்றுள்ளது. நெஞ்சுகுளிர அநுஸந்தித்தபடியா மிது. ஸூர்யமண்டலத்தில் நாரா யணனிருக்கு மிருப்பை அந்த ஸூர்யன் தானே சொல்லிக் கொள்ளவில்லை, பிறர் சொன்னவளவேயுள்ளது. வகுளபூஷணபாஸ்கரனிலிருக்கு மிருப்பை அந்த பாஸ் கரர் தாமே பேசியுள்ள வாசி காண்க.

**12** கீழேயெடுத்துக்காட்டிய காடகச்ருதியில் ஸாவித்ரவித்யை என்றதற்குத் திருவாய்மொழி யென்கிற பொருளும், ஸவிதா என்பதற்கு வகுளபூஷண பாஸ்கர னென்கிற பொருளும் கூறினதை அத்யுக்தியென்று கருதவேண்டா; இதற்கு வேத ஸம்வாதமே காட்டுவது காணீர்; யஜுர்வேதத்தில் நாலாவதுகாண்டத்தின் ஆரம்பம்

"யுஞ்ஜாந: ப்ரதமம் மநஸ் தத்வாய ஸவிதா திய:,

அக்நிம் ஜ்யோதிர் நிசாய்ய ப்ருதிவ்யா அத்யாபரத்."

என்பதாம். இதில் ஸவிதா என்றது வகுளபூஷண பாஸ்கரரையே யென்பது ஸ்பஷ் டம். (எங்ஙனே யென்னில். ப்ரதமம்—திருவாய்மொழி தொடக்கத்தில், மந: திய: தத்வாய யுஞ்ஜாந: —பரதத்வமான எம்பெருமான் பொருட்டு, ¤தொழுதெழு என் மனனே¤ என்று பணித்தவர். [இங்கு ஸவிதா என்றபதம் குறிக்கொள்ளத்தக்கது.



(வலது பக்கத்தில்) ஸ்ரீமான் உ. வே. திருமலை. விஞ்சிமூர். சிங்கராசாரியர். —உபயவேத கண்டீரவர்.—

(இடது பக்கத்தில்) ஸ்ரீமான் உ. வே. திருக்கோட்டியூர் சாத்துப்படி வரதாசாரியர் இவ்விருவரும் பேரருளாளன் ஸந்நிதி நித்ய கைங்கர்ய நிஷ்ணுதர்.

**13**. கீழே குறித்த வேதவாக்கியத்தில் "அக்நிம் ஜ்யோதிர் நிசாய்ய" இத்யாதியால் ஆழ்வாருடைய ஒரு சிறந்த சரித்ரவிசேஷம் ஸூசிதமாகிறது. (அதாவது) மதுரகவிகள் வடதேச யாத்திரையாகப் புறப்பட்டு நெடுந்தூரஞ் சென்றபோது ஒருநாள் ஸாயம் ஸந்த்யாவந்தனத்தில் "தக்ஷிணாயை திசே நம:" என்று சொல்லித் தென்திசை நோக்கினபோது ஆழ்வாருடைய ஜ்யோதிஸ்ஸு ஸேவைஸாதித்து ஏதோ மஹாநகரம் தீப்பற்றியெரிவதாகக் கண்டு திரும்பினரென்கிற இதிஹாஸம்.

**14**. அத்யாபக ஸ்வாமிகளின் ஏற்றப். திருக்குடந்தை எம்பெருமானுக்கு ஆராவமுது என்கிற திருநாமம் ப்ரஸித்தமாயிருப்பது போல் திவ்யப்ரபந்த அத்யாபகஸ்வாமிகளுக்கும் ஆராவமுதென்கிற திருநாமத்தை ஆழ்வார் அருளியிருக்கின்றார். திருவாய்மொழியில் (5-7-11.) "வைகல் பாடவல்லார் வானோர்க்கு ஆராவமுதே" என்கிற பாசுரங்காண்க. ஏறிடும் பொருளன்று உள்ளபொருளே.

**15**. ஆண்டாள்திருப்பாவைதான் அத்யாபகர்களென்கிற வ்யபதேசத்திற்கு மூலம். ஆண்டாள் திருப்பாவையில் "சிற்றஞ்சிறுகாலே வந்துன்னைச் சேவித்து உன்பொற்றாமரையடியே போற்றும் பொருள் கேளாய்" என்று எம்பெருமானை நோக்கி(கேளாய்) என்றுரைத்த சொற்சுவையைநோக்கி அத்திருப்பாவைகுத்தனியனிட்டருளின பட்டர் "அத்யாபயந்தீ" என்றருளிச் செய்தார். ஆண்டாள் அத்யாபிகை; அவளுடைய பரிகரபூதர்கள்—அத்யாபகர்கள். ஸாங்க (ஸம்ஸ்க்ருத) வேதாத்யயநமசெய்தாலும் அவர்கள் அத்யேதாக்கள் என்றே பேர்பெறுகிறார்கள். திவ்யப்ரபந்தத்தில்அந்வயமாத்ரமேகொண்டுஅத்யாபகவ்யபதேசம்பெறுகிறார்கள்.

**16** இந்தளத்தில் தாமரைபூத்தாற்போலே. பிள்ளையுலகாசிரியர் முமுக்ஷுப்படியில் த்வயப்ரகரணத் தொடக்கத்தில் "புறம்புண்டான பற்றுக்களையடைய வாஸனையோடே விடுகையும்" என்றுதொடங்கி ஸ்ரீவைஷ்ணவாதிகாரிக்கு அவச்யாபேக்ஷிதங்களை அருளிச்செய்து போருகையில் "இப்படி யிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களேற்றமறிந்து உகந்திருக்கையும்" என்றுள்ளது. அவ்விடத்து மணவாளமாமுனிகளின் வியாக்கியானத்தில்—கீழ்ச் சொன்ன இவ்வாகாரங்களெல்லாம் உடையராயிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களைக் கண்டால், இந்தளத்திலே தாமரை பூத்தாற்போலே இந்த



ஸ்ரீமான் உ. வே. கோயில் பிரதிவாதிபயங்கரம் (கண்ணமாசாரியர்) என்கிற ராமாநுஜாசாரியர் (Tamil Pandit)

விபூதியிலே இங்ஙனேயுமிருப்பார் சிலருண்டாவதே! என்று அவர்கள் வைபவத்தை யறிந்து அவர்களளவில் ப்ரீதியுக்தனாயிருக்கை. கீழ்ச்சொன்னவை யெல்லாம் உண்டானாலும் உண்டாக அரிதாயிருப்பதொன்றிறே இது" என்றுள்ள ஸ்ரீஸூக்தி பொன்னேபோல் போற்றத்தக்கது. [இந்தளம்—குமிட்டிசட்டி.] *ஹஸந்திகாயாமிவ பத்மபுத்ரம்:* என்ற சுலோகங் காண்க.

**17**. **ஈசன்-என்கிற சொல்லைப்பற்றி.** (ஈசன்) என்கிறசொல் பெரும்பாலும் சிவனுக்கு வழங்கிவருகிறது. *ஈசனை வென்ற சிலைகொண்ட செங்கண்மால்* என்றும் *இனியறிந்தேனீசற்கும் நான்முகற்கும் தெய்வம்* என்றும் திருமழிசைப் பிரானருளிச் செய்கிறார். *சம்புரீஶ: பசுபதி: சிவச் சூலீ* என்பது அமரகோஶம். இதைப் பற்றி ஆழ்வான் ஸ்ரீவைகுண்ட ஸ்தவத்தில் (18) *அந்யத்ர து க்வசந கேசிதிஹேஶஶப்தாத் லோகப்ரஸித்திமுபகம்ய தமீஶமாஹு:, தைச்ச ப்ரஸித்திவிபவஸ்ய ஸமூலதாயை க்ராஹ்யா த்ரயீ த்வயி து ஸா அச்யுத! ஸமமுகீநா* என்றருளிச் செய்துள்ளார். அவ்விடத்து அடியேனுடைய வியாக்கியானம் காண்பது.

**18** உடையவர் வலையுள்பட்டு. ஆழ்வார்களின் கால ஆராய்ச்சி செய்கிற நவீனர்கள் கண்மூடிகளாய் மனம்போனபடியும் கைபோனபடியும் எழுதியுள்ளார்கள். *உழைக்கன்றே போல நோக்கமுடையவர் வலையுள்பட்டு* என்று திருமாலையில் தொண்டரடிப் பொடியாழ்வாரும்; *துவரித்த உடையவர்க்கும் தூய்மையில்லாச் சமணர்க்கும்* என்று பெரியதிருமொழியில் (5-6-8) திருமங்கையாழ்வாரும் கூறியிருக்கையாலே, உடையவர் என்று வழங்கப்படுகிற ஸ்ரீராமாநுஜருக்குப் பிறகே அவ்வாழ்வார்களிருவரும் அவதரித்தார்களென்பது கல்வெட்டு" என்பது அவர்களது மருள் மொழிகளி லொன்று. (மேலே *எம்பெருமானார்* என்ற விடமுங்காண்க.

**19**. (**எம்பெருமானார்க்கிடம்.**) பெரிய திருமொழியில் திருக்கடன் மல்லைப்பதிகத்தில் (2-6-9) *இணங்கு திருச்சக்கரத்தெம்பெருமானார்க்கிடம்* என்றதில் (எம்பெருமானார்க்கு) என்பதற்கு எம்பெருமானுக்கு என்றே பொருள். ஆர்விகுதி உயர்வு குறிப்பதாம். ஸம்பிரதாயத்தில் ஸ்ரீராமாநுஜர்க்கு எம்பெருமானாரென்று திருநாமம் ப்ரஸித்தமாகையாலே, நவீன ஆராய்ச்சிக்காரர்களி லொருவர் இது ஸ்ரீராமாநுஜரையே குறிப்பதாகக் கொண்டு, இப்பாசுரத்தை யெடுத்துக்காட்டி "இதனால்



(வலது பக்கத்தில்) ஸ்ரீமான் உ. வே. கோயில் கந்தாடை அண்ணன் ரங்கராஜாசாரியர் P B.A. பாகிநேயர்.

(இடது பக்கத்தில்) ஸ்ரீகாசீஞ். பிரதிவாதிபயங்கரம் செல்லமணி என்கிற ரங்கநாதாசாரியர். P. B. A. ஸ்வீக்ருத புத்திரர். இருவரும் ஸம்ப்ரதாய ஸார்வபௌமர்கள்.

---

திருமங்கையாழ்வார் ஸ்ரீராமாநுஜர்க்கும் பிற்பட்டவரென்பது கல்வெட்டு'' என்றெழுதியுள்ளார். மிக மெச்சத் தக்க மேதை.

**20.** [தொண்டரடிப் பொடியாட நாம் பெறில்] ஸ்ரீகுலசேகராழ்வாரருளிச் செய்த பெருமாள் திருமொழியில் (2-2) ஆடிப்பாடியரங்கவோவென்றழைக்கும் தொண்டரடிப் பொடியாட நாம் பெறில் என்றுள்ள பாசுரத்தை யெடுத்துக்காட்டி "இத்தால் தொண்டரடிப் பொடியாழ்வார் குலசேகராழ்வார்க்கு முற்பட்டவரென்பது ஐயமின்றி அறியலாகிறது'' என்று ஒரு மஹாமேதாவி எழுதியுள்ளார். இதனோடு கூடவே யெழுதுகிறாரவர்-''இப்பாசுரத்தில் தொண்டரடிப் பொடியென்பதற்குத் தொண்டர்களின் பாததூளியென்று பொருளானாலும் தொண்டரடிப் பொடியாழ்வாரை நினைப்பதும் நினைப்பூட்டுவதும் குலசேகராழ்வார் கருத்திற் கொண்டதேயாகும்; இல்லையேல், மோனைக்குச் சேர (அன்பரடிப்பொடி)என்று இயற்றியிருப்பர்'' என்று. இவர் மோனையின்பத்தை எவ்வளவு கண்டிருக்கின்றாரென்றறியோம். எதுகைக்கும் மோனைக்கும் சேர ஒருவர் திருக்குறளைத் திருத்தின கதையை நினைப்பது.

**21.** ஆழ்வார்களின் கால ஆராய்ச்சிக்காரர்களுக்கு நாம் முக்கியமாகத் தெரிவிப்பதொன்றே. திருவரங்கம் பெரியகோயிலில் சந்திரபுஷ்கரிணியின் கிழக்கே வாஸுதேவப் பெருமாள் ஸன்னிதியில் ஆழ்வார்கள் பதின்மரும் வீற்றிருந்த திருக்கோலமாகத் திருப்ரதிஷ்டை செய்யப்பட்டிருக்கிறார்கள். பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவ பூர்வசதகத்தில் சந்திரபுஷ்கரிணிக்கு ச்லோகமிரண்டு இட்டருளினபிறகு பூர்வேண தாம் தத்வத் என்று தொடங்கி பராங்குசாத்யா: ப்ரதமே புமாம்ஸோ நிஷேதிவாம்ஸோ திசு மாம் திசேயுர் என்று பணித்துள்ளார். ''வீற்றிருந்த திருக்கோலமாக எழுந்தருளியுள்ள நம்மாழ்வார் முதலான ஆழ்வார்கள் பதின்மரும் என்பால் அருள் செய்யவேணும்'' என்பது இதன் கருத்து.

**22.** பட்டரென்பவர் கூரத்தாழ்வானுடைய திருக்குமாரர். இவர்களின் காலமும ஸ்ரீராமாநுஜர் காலமும் ஒன்றே. ஸ்ரீராமாநுஜர் காலத்திற்குமுன்னமே ஆழ்வார்கள் பதின்மர்க்கும் மூல விக்ரஹப்ரதிஷ்டை நிகழ்ந்திருக்கின்றதென்பது நன்கு விளங்கிற்று. ஸ்ரீராமாநுஜர் காலம் இற்றைக்கு நாற்பது வருஷம் குறைய



ஸ்ரீமான் உ. வே. திருமணி
ஸ்ரீநிவாஸவரதாசாரியர்
—தேவப்பெருமாள் தேவஸ்தானத்தில் நம்மாழ்வார் ஸன்னிதி ஆதீனம்—

ஆயிரம் வருஷமாகிறது. ஆக, ஆயிரமாண்டுகட்கு முன்னமே ஆழ்வார்கள் பதின்மர்க்கும் (மூலவிக்ரஹ) ப்ரதிஷ்டை ஆகியுள்ளதென்று தேறிற்று. நவீன ஆராய்ச்சியாளர்கள் இதைக் கண்டிலார்.

**23** உலகில் ஒருவர்க்கு விக்ரஹப்ரதிஷ்டை ஏற்படவேணுமானல் அவர் மறைந்தவுடனே ஏற்பட்டு விடாது. மறைந்தபிறகு அவருடைய புகழ் மிகமிகப் பரவி சிலபலவாண்டுகள் கடந்தபின்னரே விக்ரஹப்ரதிஷ்டை ஏற்படும். அதிலும் ஸ்ரீரங்க நாதனுடைய ஸன்னிதியில் ப்ரதிஷ்டை ஏற்பட்டதென்ருல் இது ஸாமாந்யமாக—லகுவாக ஏற்படக்கூடியதன்று இந்த ஒன்றுகொண்டே ஆழ்வார்களின் காலநிலையைப் பிராமாணிகர்கள் அறுதியிடலாம்.

**24**. ஆழ்வார்களின் பெருமையை நாம் நடுநிலையில்நின்று அறிந்துகொள்ள ஸ்ரீபாகவதமென்கிற க்ரந்தமொன்றே போதும். அது ஸ்ரீவைஷ்ணவர்கள் மட்டும் ஆதரிப்பதன்று. உலகிலுள்ள வைதிக மதத்தவர்கள் யாவரும் ஸ்ரீராமாயணம் போல் ஆதரித்து வருமது. அதில் பதிேனராவது ஸ்கந்தத்தில் "க்ருதாதிஷு நராராஜந்! கலௌ இச்சந்தி ஸம்பவம், கலௌ கலு பவிஷ்யந்தி நாராயணபராயணா:" என்று தொடங்கியுள்ள சுலோகங்களை நமது பூருவாசாரியர்கள் ரஹஸ்ய நூல்களில் எடுத்துக்காட்டி யுள்ளார்கள். ஆசார்யஹ்ருதயத்தில் "க்வசித் க்வசித் தென்று இவராவிர்ப்பாவம் 'கலியுங் கெடும் போலே ஸூசிதம்'' என்றருளிச் செய்யப்பட்டுள்ளது. வேதாந்த தேசிகன் தமது குருபரம்பராஸாரமென்னும் ரஹஸ்யத்தில் சிறிது விரிவாகப் பணித்துள்ளார்.

**25**. எங்ஙனே யென்னில், "பீதகவாடைப்பிரானர் பிரமகுருவாகி வந்தென்றும் சொல்லுகிறபடியே அகஸ்த்யஸேவிதமான தேசத்திலே அநேக தேசிகாபதேசத்தாலே அவதரித்தருளினன். இத்தை கணிசித்து "கலௌ கலு பவிஷ்யந்தி நாராயண பராயணா:, க்வசித் க்வசிந் மஹாபாகா: த்ராமிடேஷு ச பூரிச:; தாம்ரபர்ணீ நதீ யத்ர க்ருதமாலா பயஸ்விநீ, காவேரீ ச மஹாபாகா ப்ரதீசீ ச மஹாநதீ" என்று மஹர்ஷியருளிச் செய்தான்'' என்பது குருபரம்பராஸார (தேசிக) ஸூக்தி.

**26**. மேலெடுத்துக்காட்டிய ச்லோகங்களில்–தாம்ரபர்ணி, க்ருதமாலா, பயஸ்விநி, காவேரி, ப்ரதீசீ–என்று ஐந்துநதிகள் காட்டப்பட்டுள்ளன. நான்கில்லை, ஆறில்லை. இந்த ஐந்து நதிகளின் கரையிலேதான் ஆழ்வார்கள் திருவவதாரம் செய்தருளியுள்ளார்கள். தாம்ரபர்ணீதீரத்தில் நம்மாழ்வாரும் மதுரகவியாழ்வாரும்.



இங்கு இடையில் வீற்றிருப்பவர் கோயில் பிரதிவாதிபயங்கரம் (கண்ணமாசாரியர் என்கிற) உ.வே. ராமாநுஜா சாரியர். ஏற்கெனவே கீழே தனியாகக் காட்சி தந்தவர் இருபக்கத்திலும் அவருடைய இருதிருக்குமாரர்கள். லௌகிகக் கல்வித்திறமையோடு திவ்யப்ரபந்த பூர்ணாதிகாரிகள்.

... ... ... ...

**க்ருதமாலா** என்பது தென்மதுரையில் பெருகுவது. இதன்கரையில் பெரியாழ்வாரும் ஆண்டாளும். பயஸ்விநியென்பது பாலாறு. இவ்வாற்றின் கரையில்-பொய்கையார் பூதத்தார் பேயார் திருமழிசைப்பிரான் ஆகியநாலவர். காவேரியின் தீரத்தில்-தொண்டரடிப்பொடியாழ்வார், திருப்பாணாழ்வார், திருமங்கையாழ்வார் இம்மூவர் தோன்றினர். **ப்ரதீசீ** என்பதுமேலாறு; அது மலை நாட்டிலே பெருகுவது. [அதில் அடியேன் நீராடியிருக்கிறேன்.] அதன கரையில் குலசேகராழ்வார் திருவவதரித்தருளினர். நதியும் மிச்சப்படவில்லை, ஆழ்வார்களும மிச்சப்படவில்லை.

**27**. ஒரு விசேஷம் குறிக்கொள்ளவேணும். கங்கை, யமுனை, ஸரஸ்வதி, ஸரயு, க்ருஷ்ணை, துங்கபத்ரை முதலிய புண்ய நதிகளுமிருக்கின்றன. அந்நதிகளின் கரையிலும் சிலசில பக்தர்கள் தோன்றியிருக்கலாம். ஆனால் அந்த நதிகளை ப்ரஸ்தாவிக்கவில்லை. '**கலௌ-க்வசித்க்வசித் பவிஷ்யந்தி**" என்று சொன்னதோடு நில்லாமல், தமிழ்நாட்டில் அதிகமாக அவதரிக்கப்போகிறார்கள் [*த்ரமிடேஷு ச பூரிஶ:*] என்று சொல்லியிருப்பது ஒன்று; ஆழ்வார்களில் நம்மாழ்வார்க்கு ப்ரபந்நஜநகூடஸ்தரென்கிற ப்ராதாந்யம் தோனறப்போகிறதென்பதறிந்து தாம்ரபர்ணீ நதியை முந்துற முன்னம் கூறியிருப்பது மற்றொன்று.

**28**. *[நம் ஆசார்யர்களின் ஐகமத்யம்.]* பிள்ளை யுலகாசிரியரின் திருத்தம்பியாரான அழகியமணவாளப்பெருமாள் நாயனார் ஆசார்யஹ்ருதயத்திலே 'மேகம் பருகின ஸமுத்ராம்புபோலே நூற்கடற்சொல் இவர் வாயனவாய்த் திருந்தினவாறே ஸர்வதா ஸர்வோபஜீவ்யமாமே" என்றருளிச்செய்ததை யடியொற்றி, வேதாந்ததேசிகன் குருபரம்பராஸாரத்தில் "பராங்குஶபரகாலாதிரூபத்தாலே அபிநவமாகஒரு உறவாவதாரத்தைப்பண்ணி மேகங்கள் ஸமுத்ரஜலத்தைவாங்கி ஸர்வோபஜீவ்யமான தண்ணீராக உமிழுமாபோல" என்று பணித்தார். திருவாய்மொழி வியாக்கியான அவதாரிகையில்-புமான்களான ஆழ்வார்களுக்கு ஸ்த்ரீபாவனை கூடினபடி எங்ஙனே யென்று கேட்டுக்கொண்டு "பாஞ்சால்யா: பத்மபத்ராக்ஷ்யா: ஸ்நாயந்த்யா ஜகநம் கநம், யா: ஸ்த்ரியோ த்ருஷ்டவத்யஸ்தா: பும்பாவம் மநஸாயயு:* என்கிற மஹாபாரத ச்லோகத்தையெடுத்துக்காட்டி ஸமாதானம்பண்ணியுள்ளது.



1. ஸ்ரீமான் பிள்ளை லோகம் விஜயராகவாசாரி
2 ஸ்ரீமான் K. B ஸ்ரீதராசாரி
3. ஸ்ரீமான். K. K. அண்ணன் ராகவாசாரி. (மூவரும் திவ்யப்ரபந்தப்ரவீணர்கள்)

இதையடியொற்றி தேசிகன் த்ரமிடோபநிஷத் தாத்பர்யரத்நாவளியிலே *பாஞ்சாலீமாதர ஸோபாஹ்ருதநயந வதூர்மபும பாவ நீத்யா* என்று சுலோகமாக்கியருளினர்.

**29.** [திருப்பாவையில் ஆராய்ச்சி விஷயம் இரண்டு வருகின்றது?] எட்டாவது பாசுரத்தில் *தேவாதிதேவனைச் சென்றுநாம் சேவித்தால் ஆவாவென்றாராய்ந்தருள்* என்பது முதலதான ஆராய்ச்சி; இருபத்துமூன்றுபாட்டில்*யாம் வந்த காரியமாராய்ந்தருள்* என்பது இரண்டாவதான ஆராய்ச்சி.* கீழ்வானப்பாசுரத்தில் ஆராய்ந்தருள் என்றது ஆராய்ந்தருள்வன் என்றபடி. 'நீ ஆராய்ந்தருள்' என்றபடியன்று. தேவாதிதேவன் ஆராய்ந்தருள்வன் என்றே பொருளாம். என்னவென்று (ஆராய்ந்தருள்வன்) என்று கேள்விபிறக்கும். அதனை விவரிப்போம் மேலே *மாரிமலை முழஞ்சிற் பாசுரத்தில் *பூவைப் பூவண்ணா! யாம்வந்த காரியமாராய்ந்தருள்* என்றதில் எவ்விதமான ஆராய்ச்சி ப்ராப்தம்? என்பதையும்மேலே விவரிப்போம்.

**30.** நம்மாழ்வார் திருவாய்மொழியில் (5-4-5)*ஆரென்னை யாராய்வார்?* என்கிறார்; இதற்கு இருவகையாகப் பொருள்கொள்ளலாம்- இந்த *ஊரெல்லாந்துஞ்சிப் பதிகத்தின் ஸாரப்பொருளை நூற்றந்தாதியில் அருளிச்செய்யாநின்ற மணவாளமாமுனிகள் *மாறன் திருவுள்ளத்துச் சென்றதுயர், ஓதுவதிங் கெங்ஙனேயோ!* என்கையாலே இப்படித் துயருற்றிருக்கின்ற என்னை ஒருவரும் ஆராய்வாரில்லையே! என் துயரைத்தீர்ப்பதற்கான கவலை அந்தோ! ஒருவர்க்குமில்லையே! என்பதுஒருபொருள்; மற்றொருபொருளாவது–'வீட்டின்பவின்பப் பாக்களில் த்ரவ்யபாஷா நிரூபண ஸமம் இன்பமாரியில் ஆராய்ச்சி'' என்கிற ஆசார்யஹ்ருதய திவ்யஸூக்திப்படி என்பிறவியையும் என்பேச்சையும் பற்றி ஆராய்ச்சி செய்வாரார்? ஒருவருமிலலை. ''பேச்சுப் பார்க்கில் கள்ளப்பொய்ந் நூல்களும் க்ராஹ்யங்கள். பிறவிபார்க்கில் அஞ்சாமோத்தும் அறுமூன்றும் கழிப்பனும்'' (ஆசார்யஹ்ருதயே) என்கையாலே என்பிறவியை க்ருஷ்ணக்ருஷ்ணத்வைபாயநாதிகளின்பிறவியிற்காட்டிலும் சிறந்ததாகவும் என்பேச்சைமஹாபாரதகீதைகளிற்காட்டிலுஞ் சிறந்ததாகவும் கொள்வர்களேயல்லது அவற்றைப்பற்றி ஆராய்வாரில்லை—என்பது மற்றொருபொருள். *ஊரெல்லாந்துஞ்சிக்குக் கீழ்ப்பதிகமான *மாசறுசோதியில் *குதிரியாய் மடலூர்துமே* யாம்மடலூர்ந்தும* என்று; மடலூரமுயன்றதுபற்றியும், மேலே *வானமாமலையே அடியேன் தொழவந்தருளே யென்று அவனிருக்குமிடம் நாம் செல்லவேண்டியிருக்க அவனை வருமாறு அழைத்ததுபற்றியும் ஆராய்வாரில்லை-இவைசாஸ்த்ரார்த்தங்களே என்றுகொள்வர்



ஸ்ரீகாஞ்சீ கீழண்டைகோபுர வீதியில் திகழும் உடையவர் திருமாளிகைமுகப்புத் தோற்றம். இந்த இப்போது நடைபெற்றுவரும் ஜீர்ணோத்தாரணம் முடிவு பெற்றபின்பு இந்த முகப்புத் தோற்றம் மாறுபடக் கூடும்.

**31**. திருப்பாவையிலிருந்து எடுத்துக் காட்டிய இரண்டு ஆராய்ச்சிகளும் அவசியம் விமர்சனம் செய்ய வேண்டியவையாகும். இதை விவரிப்பதற்குமுன் ஸ்ரீராமாயணார்த்த விசேஷமொன்றை சிக்ஷித்துக் கொள்வோம். சக்ரவர்த்தி திருமகன் பஞ்சவடிசேர்ந்து இளையபெருமாள் சமைத்த பர்ணசாலையில் எழுந்தருளியிருக்கிறார்; அரக்கர்களால் நலிவுண்டு வருந்திக்கிடக்கிற மஹர்ஷிகளிருக்குமிடங்களிலே தாம் சென்று அவரவர்களுக்குத் தேறுதல் சொல்லிவரவேணுமென்று தாம் பாரித்திருக்கிறார் அதற்குள் அந்த மஹர்ஷிகள் தாமே பெருமாளிடம் பதறி ஓடிவந்தார்கள். அப்போது அவர்களைக்கண்ட பெருமாள் "ப்ரஸீதந்து பவந்தோ மே" என்றார். இதன் பொருளாவது—முனிவர்களே! என்னை நீங்கள் மிகவும் மன்னிக்கவேணும். எனக்கு மிகவும் வெட்கமாயிருக்கிறது. உங்களிடம் நான்வந்து விசாரிக்கவேண்டியிருக்க, நீங்கள் என்னைத் தேடிவரும்படி நான் பிற்பாடனாய் விட்டேனே! என்பதாம்.

**32** இதனால் என்ன விளங்கா நின்றது? எம்பெருமான் அடியார்களிருக்குமிடத்தேவந்து உபசாரஞ்செய்யக் குதூஹலிப்பவனாயிருக்க, அவனிருக்குமிடத்தே நாம் செல்வதை அவன் ஸஹிக்ககில்லானென்பது நன்கு விளங்குகின்றது. தேவாதிதேவன் விபவமூர்த்தியாயிருக்கும் போது அவன் பக்கலிலே நாம் சென்றால் ஆவாவென்பன் = ஹா ஹா! என்பன். அவ்வளவோடுப் நில்லாமல், ஆராய்ந்தருள்வன் - இவர்கள் ஸ்வரூபமுணர்ந்தவர்களா அல்லரா? என்று ஆராய்ந்தருள்வன். ஆராய்ச்சியில் என்னதேறும்? பரகத ஸ்வீகாரமே பாங்கு—என்றுதேறும்.

**33** [யாம்வந்தகாரிய மாராய்ந்தருள்.] தண்டகாரண்ய முனிவர்கள் "ஏஹி பச்ய சரீராணி" என்று அரக்கர் தின்ற வுடம்பைக்காட்டி சரீர ரக்ஷணம் பண்ணிக்கொள்ளப் பார்த்தார்கள். நாங்களும அவர்களைப் போன்றுவந்தோமா? என்று ஆராய்ந்தருள். மங்களாசாஸனம் பண்ணவந்தோம்; உன்னிடத்தில் ஒன்று வேண்டிப்பெறுதற்காகவன்றிக்கே உன்னையே வேண்டிவந்தோம்;—பூவும் மணமும் போலே உன்னோடு இணைபிரியாது சேர்ந்திருக்கவந்தோம். உனக்கே ஆட்செய்ய வந்தோம். இவ்விஷயங்களை நாங்கள் சொல்லியா நீ தெரிந்து கொள்ளவேண்டுட?



1. ஸ்ரீமான் கோயில்கந்தாடை அண்ணன் அனந்தாசாரி. திவ்யப்ரபந்த பூர்ணாதிகாரி.

2 ,, திருக்கோட்டியூர் (அணுச்சியென்கிற) ராமாநுஜாசாரி. தேவப்பெருமாள் ஸன்னிதி சாத்துப்படி மிராசுதாரர்

3 ,, K B. தேவராஜாசாரி. திவ்யப்ரபந்த பூர்ணாதிகாரி. (Lecturer)

... ... ... ...

எங்கள் வடிவையும், *பூவைப்பூவண்ணாவென்று யாப் உன்வடிவில் காட்டினாடுபாட்டையுங் கொண்டே தெரிந்து கொள்ளலாகாதோ? நன்கு ஆராய்ந்துபார் என்றபடி.

**34**. [இடையில் ஒரு சோக ஸமாசாரம் கோயில் விருத்தாந்தம்.] திருவரங்கம் பெரியகோயிலில் ஜ்ஞானசீல வயோவ்ருத்தராய் எழுந்தருளியிருந்த ஸ்ரீமத்குண்டலம் ரங்கஸ்வாமி ஐயங்கார் என்றும் குண்டலவாக்யார் ஸ்வாமியென்றும் ப்ரஸித்தராயிருந்த மஹான் தமது எண்பத்திரண்டாவது பிராயத்தில் திருநாடலங்கரித்தார் [20—2—76 தேதியில்] என்று கேட்டுத் திடுக்கிட்டேன். இந்த ஸ்வாமி சிறந்த கனபாடியாய் விளங்கினவர். நம் பெருமாளுக்கு எழுபது ஸம்வத்ஸர காலம் இடைவீடின்றி வேதபாராயண கைங்கர்யதுரந்தரராயிருந்தவரென்பதை நன்கறிவேன். ஸ்ரீரங்கதர்சன நிர்வாஹ துரந்தரர்களில் தலைவராயிருந்து நிர்வஹித்து வந்தவர் என்பது விசேஷித்த விஷயம்.

**35**. [ஒருகால் இவரிடம்கேட்டிருந்து இப்போதுநினைவுக்குவந்தவிநோத கதையொன்று;] ஒரு மஹாவீரன் தன்னுடைய விக்ரமப்பெருமைகளைப் பேசத்தொடங்கி “நேற்று நான் ஐந்நூறு வீரர்களினுடைய கால்களை வெட்டி விட்டு எனக்கு ஒரு அபாயமுமில்லாமலே வந்து விட்டேன்” என்றானும். அது கேட்டவர்கள் ‘தலைகளை வெட்டாமல் கால்களை ஏன் வெட்டினாயப்பா!, என்று வினவ, “ஒரு வாரத்திற்கு முன்பு தலைகளையெல்லாம் எவனோ வெட்டிவிட்டுப் போய் விட்டானும், ஆதலால் நான் கால்களை வெட்டினேன்” என்றானும். விஷயம் புரிந்ததா?

**36**. கூரத்தாழ்வானைப்பற்றி ஓர் ஐதிஹ்யம். பெரிய திருமொழி வியாக்கியானத்தில் (8-1-1) *சிலையிலங்கு பொன்னாழி ப்ரவேசத்தில் ஆழ்வான் பெருமை விளங்க அருளிச்செய்ததோர்ஐதிஹ்யம்; “ராஜேந்த்ர சோழனிலே ஒரு ப்ராஹ்மணன் மகன் புத்தரோடே ஸம்ப்ரதாயமுண்டாய் பூணுநூலையும் குடுமியையும் அறுத்துப் பொகட்டான். கூரத்தாழ்வான் அங்கேற நடந்தவளவிலே அவன் சிகாயஜ்ஞோபவீதங்களைத் தரித்துக்கொண்டுவந்து புகுந்தான். அவனைக்கண்ட பிதாவானவன் ‘கூரத்தாழ்வானைச் சந்தித்தாயோ?’ என்று கேட்டான். புறம்புள்ளார் நீ இது அறிந்தபடி எங்ஙனே! என்று கேட்க ‘ஆழ்வான் ஸன்னிதியிலே தமோபிபூதரும்



ஸ்ரீமதுபயவே. திருமலை, அனந்தாண்பிள்ளை சதாபிஷேக கோவிந்த நரஸிம்ஹாசாரியர் ஸ்வாமி (கோயில்).

ஸத்வஸ்தராவர்கள் காண்' என்றான்''. என்பதாக. இங்கு மூலத்தில் பரகாலநாயகியின் திருத்தாயார் தம் மகளின் செய்தியைச் சிலரை நோக்கிச் சொல்லா நின்றுகொண்டு 'என் மகள் இத்தனை நாளும் போலல்லாமல் இன்று விலக்ஷணமாகப் பேசுகின்றாள்; சிலையிலங்கு பொன்னாழி யென்கிறாள். திண்படை தண்டு ஒண்சங்க மென்கிறாள், மலையிலங்கு தோள் நான்கே யென்கிறாள்; இந்த வைகரியை நோக்குமிடத்து இவள் திருக்கண்ணபுரம் சௌரிப் பெருமாளை ஸேவித்தவளா யிருக்கவேணும்' என்பதாகப் பாசுரம் அமைந்துள்ளது. இதற்குச் சார்பாகப் பெரியவாச்சான்பிள்ளைக்கு ஆழ்வானுடைய இதிஹாஸமொன்று நினைவுக்கு வந்தது அற்புதம்! மிகவற்புதம்!!

**37**. ராஜேந்திரசோழனென்னுமூரிலே ஒரு ப்ராஹ்மணன் மகன் துஸ்ஸஹவாஸத்தாலே மதிகெட்டு சிகாயஜ்ஞோபவீதங்களை அறுத்தெறிந்து தந்தை சொற் கேளாமல் வ்ராத்யனாய்த் திரிந்துகொண்டிருந்தான்; இப்படி யிருக்கையில் ஒருநாள் அவ்வூர்க்குக் கூரத்தாழ்வான் யாத்ருச்சிகமாக எழுந்தருளினர். அந்த ப்ராஹ்மண குமாரனுக்கு ஆழ்வான் ஏதாவது ஹிதோபதேசம் செய்தருளினரோ இல்லையோ தெரியாது. ஆழ்வான் அவ்வூர்க்கு எழுந்தருளினவளவே தெரியும். அவன் அப்போதே முன்போல ப்ராஹ்மண லக்ஷணங்களுடன் கண்ணுக்கினியனாய் வீட்டுக்கு வந்து சேர்ந்தான்; அன்னவனைக் கண்ட தகப்பனார் 'பிள்ளாய்! கூரத்தாழ்வானோடு சந்திக்கப் பெற்றாயோ?' என்று கேட்க, அங்கிருந்த சிலர் இதைக் கேட்டு, உண்மையில் ஆழ்வானுடைய அருளாலேயே இவன் திருந்தினனென்பதை அவர்கள் மட்டும் நன்கு அறிந்தவர்களாகையாலே இந்த மருமத்தை இவர் எப்படியோ தெரிந்துகொண்டாரேயென வியந்து 'நீர் ஆழ்வான் இங்கேறப் போந்ததை ஸேவியாமலிருக்க எப்படித் தெரிந்துகொண்டீர்? என்று கேட்க, 'ஆழ்வானுடைய ஸன்னிதானத்தில் தாமஸர்களும் ஸாத்விகர்களாய்த் திருந்துவர்களென்பது ப்ரஸித்தமன்றோ? நெடுநாளாகத் தாமஸனாய்க் கெட்டுப்போனவிவன் இன்று ஸாத்விகபுத்தி யுண்டாகித் திருந்தினனென்றால் ஆழ்வானோடே இவன் ஸந்தித்திருக்கவே வேணுமென்று தோன்றிற்று' என்றாராம தகப்பனார். ''கண்ணபுரத்தம்மானைக் கண்டாள் கொலோ'' என்று பாட்டுத்தோறும் சங்கித்துக் கூறினதற்கு இது மிகப் பொருத்தமான மேற்கோள்.

**38** கூரேசவிஜய மென்கிற வடமொழிநூல் கூரேசரான கூரத்தாழ்வான் பணித்ததன்றாகிலும், அதிலுள்ள நிருபணங்கள் பெரும்பாலும் உபஜீவ்யங்களாகையாலே அவை ஈண்டு வரையப்படுகின்றன. ஸ்நான-ஆசமந ஸங்கல்பாதிகளில் கோவிந்தாதி திருநாமங்களே சொல்லப்படுகையாலும், வேதமோதுகையில் ஹரிபதத்தையே தொடங்குவதனாலும்,



ஸ்ரீமதுபயவே மங்களம்பாடி
ஸ்ரீநிவாஸ ராமாநுஜாசார்ய ஸ்வாமி.
(வைகுண்டவாஸி)

"ஹர்கோ தேவஸ்ய தீமஹி" என்று ஸவித்ருமண்டல மத்யவர்த்தியான நாராயணனுடைய திவ்யதேஜஸ்ஸே சிந்திக்கப்படுவதாலும், ப்ரணவார்த்தம் ஸ்ரீமந்நாராயணனே யாகையாலும், பரமஸத்வஸமாச்ரயனை இப்பெருமானுக்கே ரக்ஷணக்ரியை அஸாதாரணமாகையாலும், இவரே ஸர்வாதிகர். "ஸர்வதேவ நமஸ்கார: கேசவம் ப்ரதி கச்சதி" என்கையாலும், "ப்ராயச்சித்தாந்யசேஷாணி" என்று தொடங்கி "க்ருஷ்ணாநுஸ்மரணம் பரம்" என்கையாலும் ஸகல வைதிககர்மங்களுக்கும் ஸாத்குண்ய ப்ரதனனவிவனே பரதேவதை. ருத்ராஹுதியில் "அப உபஸ்ப்ருச்ய" என்று அசுத்திபரிஹாரார்த்தமாக அபாமுபஸ்பர்சனம் விதிக்கையாலும், அந்த ருத்ரன் தானும் *குறைகொண்டு நான்முகன் குண்டிகை நீர்ப்பெய்து—கறைகொண்ட கண்டத்தான் சென்னிமேலேறக் கழுவினனென்கிறபடியே ஸ்ரீபாத தீர்த்தத்தை வஹித்துப் புனிதனைகையாலும் ஸ்ரீமந்நாராயணனே பரதேவதை

**39** சக்ரவர்த்தி திருமகனர் சிவபூஜை செய்தாரென்னுமிடம் ஸ்ரீராமாயணத்தில் சொல்லப்படாமையால் பொய்யேயாமித்தனை. தாமஸபுராணங்களில் சொல்லிற்று அநாதரணீயம். காசியில் ருத்ரன் ஸ்ரீராம நாமத்தை தாரகமந்த்ரமாகக்கொண்டு ஜபித்து உய்ந்தது ஸுப்ரஸித்தம். ராமேச்வரமென்பதை திருவடியான ஹநுமானுடைய ரோமேச்வரமென்பர்கள். அன்றியே ஸேதுரக்ஷார்த்தமாக அங்குத் தனது சேவகர்களில் ஒருவனை ருத்ரனை நிறுத்தி நியமித்தருளினனென்னவும் குறையில்லை. ப்ரஹ்மஹத்யாசாபத்தைப் போக்கி உஜ்ஜீவிப்பித்தருளினவனே பராத்பரன்- *பிண்டியார் மண்டையேந்திப் பிறர்மனை திரிதந்துண்ணு முண்டியான் சாபந்தீர்த்த வொருவனே தைவமாகவுரியவன்.

**40.** வேதத்தில் நமகசமகங்கள் சிவபரமென்கை அஸம்பத்தம். அக்நிபரமென்றே பாஷ்யம் செய்தார்கள். "ஸர்வே வேதா யத்பதமாமநந்தி" என்றும், "வேதைச்ச ஸர்வைரஹமேவ வேத்ய:" என்றுமுள்ள ப்ரமாணகதிக்குச் சேராத வார்த்தைகள் கடலோசையோடொக்கும். கைலாஸயாத்ரையில் கண்ணனுக்கு சிவன் வரமளித்தானென்கை ஒரு நடநமாத்ரம். இதை ஆழ்வார், *கள்வா வெம்மையுமேழுலகும் நின்னுள்ளே தோற்றிய இறைவவென்று, வெள்ளேறன் நான்முகனிந்திரன் வானவர் புள்ளூர்தி கழல் பணிந்தேத்துவரே* என்கிற பாசுரத்தினல்



ஸ்ரீமதுபயவே. S கிருஷ்ண ஸ்வாமி ஐயங்கார்ஸ்வாமி, M.A., B.L., ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சந பத்ராதிபர். புத்தூர் அக்ரஹாரம்.

---

அநுஸந்தித்தருளினர். "ஸ இதி ப்ரஹ்மணோநாம ஈசோஹம் ஸர்வ தேஹிநாம், ஆவாம் தவாங்கே ஸம்பூதௌ தஸ்மாத் கேசவநாமவாந்" என்று கேசவநாமபளித்த சிவனே இதில் ஸாக்ஷி. வராஹ புராணத்தில், "மர்த்யோ பூத்வா பவாநேவம் மாமாராதய கேசவ, மாம் பஜஸ்வ ச தேவேச! வரம் மத்தோ க்ருஹாண ச, யேநாஹம் ஸர்வபூதாநாம் பூஜ்யாத் பூஜ்யதரோபவம்". "தேவ கார்யா வதாரேஷு மநுஷ்யத்வமுபேயிவாந், த்வாமேவாராதயிஷ்யாமி மம த்வம் வரதோ பவ." என்கிற வரப்ரார்த்தனையையும் வரப்ரதாநத்தையும் மெய்ப்பிக்கவேண்டிக் கண்ணன் சிவனை வணங்கிற்று.

**41**. அவதாரத்தில் மநுஷ்யபாவனையின் மெய்ப்பாட்டுக்குச்சேர தேவதாபிசருகுரு ப்ரப்ருதிகளான மனிசர்களையும் வணங்குவதில் வருவதொரு ஹாநியில்லை பிறே. சிவனுடைய அபராவதாரமான அச்வத்தாமாவின் அபாண்டவாஸ்த்ரத்தினுல் மாண்ட பரீக்ஷித்தைத் தன் திருவடிஸ்பர்சத்தினுல் பிழைப்பூட்டிய பெருமானே பெருமான்.

**42** ஆயிரம் கமலங்களைக் கொண்டு சிவனை யர்ச்சித்து பகவான் திருவாழியாழ்வானைப் பெற்றதாகச் சொல்லுமதுதானும் கல்பனை. சக்கரம் நித்யமானதென்னுமிடம் ருக் யஜுஸ் ஸாம வேதங்களில் விசதம். பாஞ்சஜந்யத்தின் உத்பத்திபோல் சக்ரத்தின் உத்பத்தியும் அவதார விஷயம். சூலாயுதம் பெறுவதற்காக சிவன் ஆயிரம செண்பகமலர்களைக்கொண்டு ஸ்ரீமந்நாராயணனை ஆராதித்தனனென்றும் அதில் குறையுற்ற புஷ்பத்திற்காகத் தன் மூக்கையரிந்து ஸமர்ப்பித்து நிறைத்தனனென்றும் பகவச்சாஸ்த்ரங்களிலே சொல்லிவைத்தது. சக்ரத்தில் நின்றும் சூலமுண்டாயிற்றென்றது அகஸ்த்ய ஸம்ஹிதை. சூலத்தை மயன் செய்தானென்றும் சொல்லிவைத்தது. சிவபுரியான காசி சக்கரப் படையினுல் எரிந்தொழிந்தது. சிவன் த்ரிபுரதஹநம் செய்தானென்பதும் பகவச்சக்தி விசேஷ ப்ரயுக்தமென்று வேதத்திலும் மஹாபாரதத்திலும் வ்யக்தம். வேதத்திலே, "தேஷாமஸுராணும் திஸ்ர: புர ஆஸந்...ருத்ரோ வை க்ரூர: ஸோஸ்யத்விதி" என்றவிடத்திலே "விஷ்ணும்



ஸ்ரீமதுபயவே. திருமலை அனந்தாண்பிள்ளை, சதாபிஷேகம், கோவிந்த நரஸிம்ஹாசார்ய ஸ்வாமி, (2) ஆழ்வார் திருநகரி இளையவில்லி (ஞானப்பிரான்) பூவராஹன் M.A.

தேஜநம்'' என்று ஓதிற்று. மஹாபாரதத்திலே, ''விஷ்ணுராத்மா பகவதோ பவஸ்யாமிததேஜஸ:, தஸ்மாத் தநுர்ஜ்யாஸம் ஸ்பர்சம் ஸ விஷேஹே மஹேச்வர:'' என்று ஸுஸ்பஷ்டமாகச் சொல்லிவைத்தது.

**43** தைத்திரீயஆரண்யகத்திலே, ''தஸ்யேந்த்ரோ வம்ரிரூபேண, தனுர்ஜ்யாமசிநத் ஸ்வயம்...சிர உத்பிபேஷ'' என்று சிவன் தலையறுப்புண்டானென்றது. புருஷோத்தமனென்றும் புராணபுருஷோத்தமனென்றும் ப்ரஸித்தனான ஸ்ரீமந்நாராயணன் மோஹிநீ வேஷம் பூண்டது நாடகங்களில் பெண்வேடமணியும் க்ரமத்திலே சேரும். கீதாசார்யன் ''திவ்யம் ததாமி தே சக்ஷு: பச்ய மே யோகமைச்வரம்'' என்று அர்ஜுனனுக்கு திவ்யசக்ஷுஸ்ஸைக் கொடுத்துக் காண்பித்தருளின விச்வரூபத்திலே பல க்ஷுத்ர க்ரிமி கீடங்களோபாதி சிவனும் ஒரு வ்யக்தியாக நின்றொழிந்தமை அவிசால்யம். சிவனை உபாஸிப்பவர்களே உலகில் அதிகமாகக் காணப்படுகிறார்களென்பதும் வெள்ளி தங்கம் முதலியவை மிகவும் வருந்தியும் காணவரிதாயிருக்க, மண்ணும் கல்லும் எங்கும் நிரப்பியுள்ளன என்னுமாபோலேயாமத்தனை. வேதவ்யாஸர் ''உத்த்ருத்ய புஜமுச்யதே'' என்று கைதூக்கிச்சொன்னது ''வேதாத் சாஸ்த்ரம் பரம் நாஸ்தி ந தைவம் கேசவாத் பரம்'' என்றிறே. வேதங்களில் பல புடைகளிலே ருத்ரன் ''அஹமேவ பசூநாமதிபதிரஸாநி'' என்றாப்போலே வரம் வேண்டினாப்போலே ஓரிடத்திலும் ஒருவர் பக்கலிலும விஷ்ணு வரம்வேண்டினதாக ஓதிற்றில்லை.

**44**. மாறாக ''அக்னிரவமோ தேவதாநாம் விஷ்ணு: பரம:'' என்று விஷ்ணுவின் பாரம்யத்தை முக்தகண்டமாகவும் சொல்லிற்று. ''கேநோபாயேந லகுநா விஷ்ணோர்நாமஸஹஸ்ரகம், பட்யதே'' என்றுகேட்ட பார்வதிக்கு ''ஸ்ரீராம ராமராமேதி ரமே ராமே மநோரமே, ஸஹஸ்ரநாமதத்துல்யம் ராமநாம வராநநே.'' என்று உள்ளபடி பரமார்த்தமுணர்த்திய ருத்ரன் பக்கலிலே பாரம்யசங்கைக்கு அவகாசலேசமுமில்லை. கிம் பஹுநா? ''ஏகோ ஹ வை நாராயண ஆஸீத் ந ப்ரஹ்மா நேசாந:'' என்று உபநிஷத்தில் ஸந்தேஹவிபர்யயங்களுக்கு இடமின்றியே சொல்லிவைத்தது. அவற்றின் ஸாராம்சங்களைத் திரட்டி ''காணிலுமுருப்பொலார் செவிக்கினாத கீர்த்தியார், பேணிலும் வரந்தரமிடுக்கிலாத தேவர்'' என்றும், ''முண்டனீறன் மக்கள் வெப்புமோடியங்கி யோடிடக் கண்டு நாணி வாணனுக்கிரங்கினானெம்மாயனே'' என்றும், ''சிலையினாலிலங்கை செற்ற தேவனே தேவனாவான்'' என்னும் நம்ஆழ்வார்கள் அப்ரத்ருஷ்யமாக அறுதியிட்டருளினார்கள்.



## Justice N. KRISHNASAMI REDDIYAR
Madras.
(Retired High Court Judge).

**45.** கீதையில் இரண்டாமத்யாயத்தின் பன்னிரண்டாவது ச்லோகத்திலிருந்தே சாஸ்த்ராரம்பமென்று சொல்லலாம். அதற்குக் கீழுள்ள பாகங்களெல்லாம் அவதாரிகையாக நிற்கிறது. அந்த பன்னிரண்டாவது ச்லோகம் எவ்விதமாகவுள்ளதென்று பார்க்கவேணும். "நத்வேவாஹம் ஜாது நாஸம் ந த்வம் நேமேஜநாதிபா:, ந சைவ ந பவிஷ்யாமஸ் ஸர்வே வயமத: பரம்" என்பதே அந்த ச்லோகம். இதன் பொருள் யாதெனில், ஸர்வேச்வரனாகிய நானும் இதற்கு முன் கழிந்த அநாதிகாலத்திலும் இருந்தவனே; அர்ஜுநா! நீயும் இந்த அரசர்களுமான க்ஷேத்ரஜ்ஞர்களுங்கூட முன்பும் இருந்தவர்களே. முன்பு இருந்தது மாத்திரமேயன்றிக்கே மேலுள்ளகாலமுமெல்லாம் நானும் நீங்களும் இருக்கப்போகிறவர்களே என்பதாம். ஸர்வேச்வரனும் பரமாத்மாவான நான் நித்யன் என்பதில் எப்படி ஸந்தேஹமில்லையோ, அப்படியே க்ஷேத்ரஜ்ஞர்களாய் ஜீவாத்மாக்களான நீங்களும் நித்யர்களென்பதில் ஸந்தேஹமில்லையென்று பகவான் தானே சோதிவாய்திறந்து பணித்துளன்.

**46.** இதனால் ஸர்வேச்வரனை பகவானிற் காட்டிலும் ஜீவாத்மாக்களுக்குண்டான பேதமும், அந்த ஜீவாத்மாக்களுக்குப் பரஸ்பரமுண்டான பேதமும் பாரமார்த்திகமென்று பகவான் தானே வ்யக்தயாகத் தெரிவித்ததாய்த்தேறுகிறது. இந்த ச்லோகம் விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்திற்கு அடிப்படையாக வுள்ளதென்று நன்குணரலாம். நமது பாஷ்யகாரர் இந்த ச்லோகத்திற்கு இட்டருளியிருக்கின்ற பாஷ்யம் மிகவும் விபுலமாக வுள்ளது.

**47.** அர்ஜுனன் (2-7.) "ப்ருச்சாமி த்வா தர்மஸம்மூடசேதா:, யச் ச்ரேயஸ் ஸ்யாத் நிச்சிதம் ப்ரூஹி தந்மே சிஷ்யஸ்தேஹம் சாதி மாம் த்வாம் ப்ரபந்நம்." என்று, தத்வார்த்தம் தெரியாமையினாலே தான் தளும்பியிருப்பதாகவும், தன்னுடைய கலக்கம் தீர தத்வார்த்தத்தை அறுதியிட்டு அருளிச் செய்யவேணுமென்றும் சொல்லித் திருவடிகளில் விழுந்து யாசித்திருக்கிறான். அப்படிப்பட்டவனுக்கு தத்வோபதேசம் செய்யவே இந்த கீதாசாஸ்த்ரம் அவதரித்தது. கீதாசார்யன், கலங்கினவனுக்குச் சொல்லும்போது தெளிவான பொருளைச் சொல்லுவனேயல்லது கலங்கின பொருளையே சொல்லமாட்டானன்றே. ஆகவே இந்த சாஸ்த்ரத்தில் கூறப்படும் பொருள்கள் யாவும் ஸர்வாத்மநா பாரமார்த்திகமென்றே வைதிகர்கள் கொள்ளக்கடவர்கள். அதிலும் ஆரம்ப ச்லோகமான விதனில் கூறப்படும் விஷயம் உபநிஷதாதிகளில் வடிக்கட்டின பொருளாகவே யிருக்கத்தகும். இதில் ஜீவாத்ம பரமாத்மபேதம் முதலியன தெரிவிக்கப்படுமவை அபாரமார்த்திகமாக இருக்கச்



ஸ்ரீமதுபயவே. (முதலியாண்டான் பெரிய ஸ்வாமி (ஸ்ரீசைலாசார்ய ஸ்வாமி)

சிறிதும் ஔசித்யமில்லை. ஆக இந்த நிரூபணங்களினால் ஸ்வாமி எம்பெருமானார் உபநிஷத்து, ப்ரஹ்மஸூத்ரம், கீதை முதலானவற்றின் பொருள்களை ஆர்ஜவத்துடன் அறிந்து அறுதியிடுபவர் என்பது நிஷ்பக்ஷபாதர்களுக்குக் கையிலங்கு நெல்லிக்கனியாகும். இப்பெருமை பொலியவே யதிராஜஸப்ததியில் "யதாபூத ஸ்வார்த்தா யதிந்ருபதிஸூக்திர் விஜயதே" என்று பொருத்தமாக தேசிகனால் பேசப்பட்டது.

**47**. இனி ப்ரக்ருதத்திலே செல்லுவோம்; *ந த்வேவாஹம் ஜாது நாஸம்* என்கிற ச்லோகத்திலே ஜீவாத்ம பரமாத்ம பேதமும் ஜீவர்களுக்குப் பரஸ்பரபேதமுமாகிற விவை காட்டப்பட்டது போல அதற்கடுத்த (13)ம் ச்லோகத்தில் "தேஹிநோஸ்மின் யதா தேஹே கௌமாரம் யௌவநம் ஜரா, ததா தேஹாந்தரப்ராப்தி: தீரஸ் தத்ர ந முஹ்யதி." என்பதில் ப்ரக்ருத்யாத்ம விவேகமும் காட்டப்பட்டது. அசேதநம் வேறு, சேதநன வேறு என்கிற பகுத்துணர்வே ப்ரக்ருத்யாத்ம விவேகமெனப்படும். நிர்விசேஷ சிந்மாத்ரமான ப்ரஹ்மமொன்று தவிர வேறு சேதநாசேதநங்கள் உண்மையில் கிடையா என்கிற வாதம் இங்கு நிராகரிக்கப்பட்டதாகிறது. "அந்தவந்த இமே தேஹா:" "ந ஜாயதே ம்ரியதே வா கதாசித்," "வாஸாம்ஸி ஜீர்ணாநி யதா விஹாய" இத்யாதிகளான ச்லோகங்களினால் ஆத்மா நித்யனென்றும், தேஹம் அநித்யமென்றும் பரக்கச் சொல்லுகிற முகத்தாலும் சேதநாசேதநங்களின் ஸத்பாவம் பாரமார்த்திகமாகவே ஸ்தலிக்கப்பட்டதாகிறது. ஆக, கீதாசாஸ்த்ரம் விசிஷ்டாத்வைதிகளுக்கே நிதியானதென்றும் மற்றையார்க்கு இது கொண்டு பணியில்லை யென்றும் சொல்லிற்றாயிற்று.

**48** (2-27.) "ஜாதஸ்ய ஹி த்ருவோ ம்ருத்யு: த்ருவம் ஜந்ம ம்ருதஸ்ய ச, தஸ்மாதபரிஹார்யேர்த்தே ந த்வம் சோசிதுமர்ஹஸி" = உத்பந்நனுக்கு மரணம் நிச்சயம்; மரணமடைந்தவனுக்கு புநர்ஜன்மம் நிச்சயம்; ஆகவே பரிஹாரமற்ற இவ்விஷயத்தில் நீ சோகிக்கக்கடவையல்லை—என்று இந்த ச்லோகத்தினால் சொல்லப்படுவதாகக் கொண்டு சிலர் சங்கிப்பதொன்றுண்டு. அதாவது உத்பந்நனுக்கு மரணம் நிச்சயம் என்பது நிராக்ஷேபமான விஷயந்தான்; ஆயினும் உடனே 'த்ருவம் ஜந்ம ம்ருதஸ்ய ச' என்றிருக்கிறதே, இது எப்படி பொருந்தும்? மரணமடைந்தவனெல்லாம் மறுபடியும் பிறந்தே தீருகிறானென்று சொன்னால் அபுநராவ்ருத்தி



செங்கற்பட்டு அட்வகேட் ஸ்ரீமான் உ. வே. G. கிருஷ்ண மாசாரியர் ஸ்வாமியும், காஞ்சீ புரம் கீதாரத்னம் நல்லப்பா ஜீயப்பங்கார் ஸ்வாமியும், ஆராய்ச்சி நிபுணனை ராமனும்.

லக்ஷணமான மோக்ஷம் இல்லை யென்று தேறிவிடுமல்லவா? "த்யக்த்வா தேஹம் புநர்ஜந்ம நைதி மாமேதி ஸோர்ஜுந!" இத்யாதியான பல ச்லோகங்களாலே கீதையில் பலகால் சொல்லப்படுவதும், "மீட்சியின்றி வைகுந்தமாநகர் மற்றதுகை யதுவே" இத்யாதிகளான பல பாசுரங்களும் பழுதாமே என்று சங்கிக்க நேர்கின்றது. இந்த சங்கை சிறிதும் யுக்தமன்று. 'ஜாதஸ்ய ஹி த்ருவோ ம்ருத்யு:' என்றதும் ஆத்மாவைப்பற்றினதன்று; 'த்ருவம் ஜந்ம ம்ருதஸ்ய ச' என்றதும் ஆத்மாவைப்பற்றினதன்று. ஆத்மாவுக்கு உத்பத்தி விநாசங்களிரண்டும் இல்லை யென்று பலகால் சொல்லப்பட்டிருக்கிறது. (2—20) "ந ஜாயதே ம்ரியதே வா கதாசிந் நாயம் பூத்வா பவிதா வா ந பூய:, அஜோ நித்ய: சாச்வதோயம் புராணோ ந ஹந்யதே ஹந்யமாநே சரீரே." என்கிற ச்லோகத்தில் ஜநநமரணாதிகளெல்லாம் அசேதநமான தேஹத்தின் தருமங்களே யொழிய நித்யனாய் அபரிணாமியா யிருக்கிற ஆத்மாவின் தருமங்களல்ல வென்று அறுதியிடப் பட்டிருக்கிறது. ஆகவே, 'ஜாதஸ்ய ஹி த்ருவோ ம்ருத்யு:' என்றதும் அசேதநமான தேஹத்திற்கே; 'த்ருவம் ஜந்ம ம்ருதஸ்ய ச' என்றதும் அதற்கே. ஆதலால் முன்சொன்ன சங்கைக்கு இடமில்லை. இனிச்சிறிது திவ்யப்ரபந்த விமர்சங்களிலே செல்வோம்.

**49.** ஆழ்வார்கள் பெண்பாவனையாலே பேசுவது வந்தேறியன்று; இயற்கையான வடிவே யென்பதற்குப் பெரிய வாச்சான்பிள்ளை ஒரு ப்ரமாணவசனம் காட்டுகிறார் திருநெடுந்தாண்டக வியாக்கியானத்திலே; "ஸ்வாமித்வாத்மத்வ சேஷித்வபும்ஸ்த்வாத்யா: ஸ்வாமிநோ குணா:, ஸ்வேப்யோ தாஸத்வ தேஹத்வ சேஷத்வ ஸ்த்ரீத்வதாயிந:॥" என்று. இதன் பொருளாவது — ஸ்வாமியான எம்பெருமானுக்கு ஸொத்தாக இருக்கிறோம் நாம். அவனுடைய ஸ்வாமித்வமானது நமக்கு தாஸத்வத்தைத் தருகின்றது. அவனுடைய ஆத்மத்வம் நமக்கு தேஹத்வத்தைத் தருகின்றது. அவனுடைய சேஷித்வம் நமக்கு சேஷத்வத்தைத் தருகின்றது. அவனுடைய பும்ஸ்த்வம் நமக்கு ஸ்த்ரீத்வத்தைத் தருகின்றது. அவன் ஸ்வாமியாயிருந்து நாமும் ஸ்வாமியா யிருக்கமுடியாது. அவன் ஆத்மாவாயிருந்து நாமும் ஆத்மாவா யிருக்கமுடியாது. அவன் சேஷியாயிருந்து நாமும் சேஷியா யிருக்கமுடியாது. இதேபோல, அவன் புருஷோத்தமனாயிருந்து நாமும் புருஷரா



ஸ்ரீமதுபயவே. குமாரவேங்கடாசாரியர் ஸ்வாமி
(முதலியாண்டான் சின்னஸ்வாமி)

யிருக்கமுடியாது. அவனுடைய பும்ஸ்த்வம் நமது பும்ஸ்த்வத்தை யழித்து ஸ்த்ரீத்வத்தைத் தாரா நின்றது. ஆகவே ஸ்த்ரீத்வ மெனபது ஆழ்வார்களுக்கு மட்டுமன்று, அவன் ஸவரூபத்தையும் நம ஸ்வரூபத்தையும் உள்ளபடி யறிந்தாரெல்லார்க்குமொக்கும்.

**50**. வடமொழி வேதத்திற்கு ஒரு சதுர்முகன் ஏற்பட்டதுபோல, தென்மொழி வேதத்திற்கும் ஒரு சதுர்முகனுண்டு — என்கிறுர் ஓர் ஆசிரியர். (இநத சுலோகம் கேளீர்;) "சதுர்முக ஸமாக்யாபி பராங்குசமுநௌ ஸ்திதா, ஸ்வவாசா மாத்ரு துஹித்ருஸகீவாசா ச கீர்த்தநாத்". (இதன் பொருளாவது) சதுர்முகனென்கிற பெயர் நம்மாழ்வார்க்குமுள்ளது; எங்ஙனே யென்னில்; அவர் தாம் நான்கு முகங்களாலே பேசியிருககிருரன்ரே. தாமான தன்மையாலும், தாய்ப் பேச்சாலும், மகள் பேச்சாலும், தோழி பேச்சாலும் பேசியிருக்கையாலே. "உயர்வறவுயர் நலம்" வீடுமின் முற்றவும்" முதலான 73 பதிகங்களைத் தாமான தன்மையிலே அருளிச்செய்துள்ளார். "ஆடியாடி" பாலனுய்" முதலான ஏழுபதிகங்களைத் தாய்ப்பேச்சாகப் பேசியுள்ளார். "அஞ்சிறையமடநாராய்" "வாயுந்திரையுகளுப" முதலான பதினேழுபதிகங்களை மகள்பேச்சாகப் பேசியுள்ளார். "தீர்ப்பாரையாமினி "துவளில்மாமணி மாடம்" கருமாணிக்கமலை ஆகிய மூன்றுபதிகங்களைத் தோழி பேச்சாகப் பேசியுள்ளார். ஆக இவ்வகையாலே நம்மாழ்வார் நானமுகனுயினர்.

**51**. திருநெடுந்தாண்டக வியாக்கியான அவதாரிகையிலே பெரியவாச்சான்பிள்ளை ஓர் அற்புதமான வாக்யராசி யருளிச்செய்கிறுர். பகவதநுபவததிலே ரிஷிகளையும் ஆழ்வார்களையும் பிணைத்துப்பேசுகிறுர், கேண்மின்.

> "சுகாதிகளும் முதலாழ்வார்களும் பரத்வத்திலே ஊன்றியிருப்பர்கள்; ஸநகாதிகளும் திருமழிசைப்பிரானும அந்தராத்மதையிலே ஊன்றியிருப்பர்கள்; வால்மீக்யாதிகளும குலசேகரப்பெருமாளும ராமாவதாரத்திலே ஊன்றியிருப்பர்கள்; பராசரபாராசர்யாதிகளும் நம்மாழ்வாரும் பெரியாழ்வாரும ஆண்டாளும் க்ருஷ்ணவதாரத்திலே ஊன்றியிருப்பர்கள். நாரதாதிகளும் தொண்டரடிப் பொடியாழ்வாரும திருப்பாணழ்வாரும் கோயிலிலே ஊன்றியிருப்பர்கள். ஸ்ரீசௌநகபகவானும் திருமங்கையாழ்வாரும் அர்ச்சாவதாரத்திலே ஊன்றியிருப்பர்கள்"

என்று, இங்ஙனே கூறிட்டது ப்ராசுர்யத்தைப்பற்ற.



ஸ்ரீமதுபயவே. ஸ்ரீகாஞ்சீபிரதிவாதிபயங்கரம் ஜகத்குரு காதிகிருஷ்ணமாசாரியர் ஸ்வாமி. [காஞ்சீமண்டல மண்டந:]

**52** திருச்சேறை ராமாநுஜ ஏகாங்கியின் விசித்திர வார்த்தை. அறுபது வருடங்களுக்குமுன் திருச்சேறையில் மணவாள ராமாநுஜ ஏகாங்கியென்று ஒரு பாகவதர் இருந்தார். அவர் திருப்பதிகள்தோறும் சுற்றிக்கொண்டேயிருப்பர்: அடிக்கடி காஞ்சிக்கு வருவர். அவருடைய விசித்திர வார்த்தைகள் கேளீர். "ஸ்ரீபாததீர்த்தம் ஸ்வீகரிக்க வேணுமானால் வானமாமலை ஸ்வாமியிடம ஸ்வீகரிக்கவேணும், சக்ராங்கனம் செய்து கொள்ளவேணுமானால் சிறு புலியூரண்ணன்ஸ்வாமியிடம் செய்து கொள்ள வேணும். பகவத்விஷயகாலக்ஷேபம் கேட்கவேணுமானால் கபிஸ்தலம் அனந்தாசார்ய ஸ்வாமியிடம் கேட்கவேணும். ஸ்ரீவசனபூஷணகாலக்ஷேபம் கேட்கவேணுமானால் காரப்பங்காடு சிங்கப்பெருமாள் ஸ்வாமியிடம் கேட்கவேணும். வடிவழகை ஸேவித்துக்கொண்டேயிருக்கவேணுமானால் கோயிலண்ணன் ஸ்வாமியையே ஸேவித்துக்கொண்டிருக்கவேணும். ஸ்ரீபாஷ்யகாலக்ஷேபம் கேட்கவேணுமானால் காஞ்சீகாதி ஸ்வாமியிடம் கேட்கவேணும். ஸரஸ ஸல்லாபங்கள் கேட்கவேணுமானால் இளைய வில்லி தொட்டயாசாரியர் ஸ்வாமியிடம் கேட்கவேணும்." இங்ஙனே சொல்லிக்கொண்டே திரிவர். இடையிடையில் "நான் சொல்லுகிறது ஸரிதானே; எல்லாருக்கும் தெரிந்தது தானே" என்பர்.

**53.** ஸ்ரீமத்பரமஹம்ஸ வானமாமலை சின்னகலியன் ஸ்வாமி வடநாட்டு யாத்திரையில் ஒரு ஸமயம் சாதுர்மாஸ்யஸங்கல்பத்திற்கு விருந்தாவனத்தில் எழுந்தருளியிருந்தார். நாடோறும் சிறுகாலையிலே எமுனைக்கெழுந்தருளி நீராடியருள்வர். ஒருநாள் உடன் விடைகொண்டிருந்த ஸ்ரீவைஷ்ணவர்களைத் திரும்பிப்போகச் சொல்லிவிட்டு, ஸ்வாமிதாம் எமுனைக்கரையிலே நெடுந்தூரமெழுந்தருளிக்கொண்டிருந்தாராம். திருவுள்ளத்தில் ஏதேனும் சீற்றத்தாலே யமுனையில் அந்தர்த்தானமாய் விடத்திருவுள்ளமோவென்று ஶங்கித்து ஒருஸ்வாமி ஒளிந்துகொண்டே உடன் சென்றாராம். ஸ்வாமி மணல்பாங்கான ஓரிடத்திலே, திருவரையில் காஷாயத்தைக் களைந்துவைத்திட்டு நெடுந்தூரம் நெடும்போது புரண்டருளி, பிறகு நீராட்டம் செய்து எழுந்தருளினாராம். கூரத்தாழ்வான் அதிமாநுஷஸ்தவத்திலே—*ஹா ஜந்ம தாஸ ஶிகதாஸ மயா ந லப்தம் ராஸே த்வயா விரஹிதா: கில மோபகந்யா:,



ஸ்ரீமதுபயவே வித்வான் வேளுக்குடி. வரதாசார்ய ஸ்வாமி (வாகம்ருதவர்ஷி)

யாஸ் தாவகீநபதபங்க்திஜுஷோ ஜுஷந்த நிஷீத்ய தத்ர நிஜமங்கம் அநங்க தப்தம்'' என்றொரு சுலோகர். அதன் கருத்து ராஸக்ரீடையன்றிரவு கண்ண பிரானைப்பிரியலுற்ற கோபிகள் இங்குமங்கும் அலைந்து கண்ணனடிச் சுவடு கண்டுகொண்டே சென்று எமுனையாற்றின் மணலில் புரண்டனரென்பதாம். ஸ்ரீஸ்வாமி அதை அநுகரித்தருளினபடி.

**54.** (திருத்தகப்பனருடைய ஓர் அநுபவம்) அடியேனுடைய ஏழாவதுவயதில் திருத்தகப்பனார் அடியேனுக்குப் பெரியாழ்வார் திருமொழிசந்தைஸாதிக்கிறார். அதில் இரண்டாம்பத்தில் (3-1)*போய்ப் பாடுடைய நின் தந்தையும் தாழ்த் தான் பொருகிறல் கஞ்சன் கடியன்* என்கிற பாசுரம் சந்தையாகிறது. (இரண்டாமடி) *காப்பாருமில்லை கடல்வண்ணா வுன்னைத் தனியே போய் எங்கும் திரிதி* என்பதைச் சந்தைசாதித்தார், அடியேன் பின்னுருச் சொல்லுகிறேன். திருத்தகப்பனார் விக்கிவிக்கி யழுகிறார். என் பிதாமஹி பக்கத்திலேயே உட்கார்ந்திருக்கிறாள். அப்பா விக்கிவிக்கி யழுவதைக் கண்டு 'என்ன ரங்கஸாமீ! என்ன ரங்கஸாமீ!' என்று அலறுகிறாள். பதில் ஸாதிக்கவில்லை—அழுகையும் ஓயவில்லை. மேலே சந்தையும் நடக்கவில்லை சிறிதுநேரம் பொறுத்து ஸாதிக்கிறார் திருத்தாயாரிடத்தில் — ''மாலைவேளைகளில் சிலருக்குத் திருவாய்மொழி சந்தை சொல்லிவருகிறேன். அதிலும் இரண்டாம்பத்துத் தானாகிறது, நம்மாழ்வார் *காக்குமியல்வினன் கண்ணபெருமான்* என்கிறார். இவ்வாழ்வார் *காப்பாருமில்லை கடல்வண்ணா வுன்னை* என்கிறார்'' என்று சொல்லிவிட்டு, மேலும் விக்கி யழுகிறார். சென்னைத் தொண்டமண்டலம் ஸ்கூல் ஹாலில் *ஊநஷோடஶவர்ஷோ மே ராம:* என்கிற ச்லோக ப்ரவசநத்தில் ப்ரஸக்தாநுப்ரஸக்தமாக இந்தப் பாசுரத்தைச் சொல்லி (மேலே விஜ்ஞாபித்த) திருத்தகப்பனார் இதிஹாஸத்தையும் உபந்யஸித்தேன். கோஷ்டியி லெழுந்தருளியிருந்த (கீர்த்தி மூர்த்தியான) மாம்பலம் மஹர்ஷி வாஸுதேவாசார்ய ஸ்வாமி சற்றுப்போது திருத்தகப்பனார் நிலைமையிலிருந்துவிட்டு 'இதைக் கேட்கவும் இங்கு அதிகாரிகளில்லையே!' என்று சொல்லிக்கொண்டே எழுந்து சென்றார்.

**55** அபிமாநமும்-பஹுமாநமும். அடியேனைச் சிலர் கேட்பதுண்டு-'ஆழ்வார்களுள் உமக்கு எந்த ஆழ்வார்மீது அபிமானம்? ஆசாரியர்களில் எந்த ஆசாரியர்மீது அபிமானம்? திவ்யதேஶங்களில் எந்ததிவ்யதேஶத்தின் மீது அபிமானம்?' என்று. அன்ன



ஸ்ரீமதுபயவே வித்வான் யதீந்த்ர ப்ரவணப்ரபாவம் பிள்ளைலோகப் பாஷ்யகாரார்சாரியர் ஸ்வாமி.

வர்களுக்கு அடியேன் விடையிறுக்கும்போது "அபிமானத்திற்கு மேல் பஹுமானமென்ப தொன்றுண்டு; அஃது உங்களுக்குத்தெரியாதுபோலும். இரண்டையுஞ் சேர்த்து நான் விடையளிக்க வேண்டியிருக்கிறது. சேண்மின். ஆழ்வார்களனைவரிடத்திலுமே அடியேனுக்கு அபிமானம் துல்யமே. ஆனுல் பஹுமானம் பெரியாழ்வார் பக்ஷலில். அவருடைய திருமொழியில் *சீலைக் குதம்பை *தழைகளும் தொங்கலும்' *நாவகாரியம்* ... இத்திருமொழிகளில் பஹுமானம்—என்றேன். ஆசார்யர்களில் அபிமானம் எல்லார் பக்கலிலும் துல்யமே; பஹுமானம் மணவாளமாமுனிகளிடத்திலே. ஸத்யம் ஸத்யம்......மாமுனிகளை நிகர்க்கும் ஆசாரியர் 'ந பூதோ ந பவிஷ்யதி.* திவ்யதேசங்களில் அபிமானம் மஹுமானமிரண்டும் கோயிலிலும் பெருமாள் கோயிலிலும்—என்றேன். இவ்விஷயத்தில் விவரித்தெழுதவேண்டியது எவ்வளவோ உண்டு. ஸம்க்ஷேப:.

**56** **திருக்கோட்டியூர் ஸ்வாமியொருவரின் விருத்தாந்தம்.** (அடியேனுடைய திருத்தகப்பனுர்காலத்துக் கதை.) ஒருநாள் காலை 8மணிக்கு அப்பா திருமாளிகைவாசல் திண்ணையிலெழுந்தருளியிருக்கிறுர். இன்னுஞ் சிலருமிருக்கிறுர்கள். திருக்கோட்டியூரிலிருந்து ஒருஸ்வாமி (ரைல்ஸ்டேஷனிலிருந்து) வண்டியில் எழுந்தருளி ப்ரதிவாதி பயங்கரம்ஸ்வாமி திருமாளிகை இதுதானே? என்று கேட்டுக்கொண்டு நம் அகத்து வாசலில் இறங்கினுர் கனத்த உச்சிக்குடுமியுடன் ஸேவைஸாதிக்கிறுர். அப்பாவுக்கு அவர்பரிசிதர்போலும் அவரைக் கண்டவுடனே படிபிறங்கி அருகேசென்று (நீராடாமல் காதில் பூணூலோடேயிருக்கிற) அவருடைய கையைப்பிடித்துக்கொண்டு க்நஹ ந்தினுள்ளே எழுந்தருளச்செய்து இடைகழி கூடம்முற்றம் பெருமாள் ஸன்னிதி திருமடைப்பள்ளியெங்கும் கையைப்பிடித்துக்கொண்டே ஓரிடம்விடாமல் ஸஞ்சரித்து, பிறகு திண்ணையில்வீற்றிருக்கச்செய்தார். இது என்னென்று எல்லாரும் வியக்கிறுர்கள். பெரியாழ்வார் திருக்கோட்டியூர்க்கு இட்டருளின *நாவகாரியப் பதிகத்தில் (6) *ஏதமொன்று மிலாதவண்கையினுர்கள் வாழ்திருக்கோட்டியூர்,



ஸ்ரீமதுபயவே. திருக்கள்ளம். நரஸிம்ஹ
ராகவாசார்ய ஸ்வாமி ஸ்ரீமதஹோபில
மடம் ஆஸ்தான வித்வான்,
ந்ருஸிம்ஹப்ரியா ஸம்பாதகர், சென்னை.

நாதனை நரசிங்கனை நவின்றேத்துவார்க ளுழக்கிய, பாததூளிபடுதலால் இவ்வுலகம் பாக்கியம் செய்ததே* என்றுள்ள பாசுரத்தை யெடுத்து ஸாதித்து 'உலகத்தை யெல்லாம் பாவனமாக்கவல்ல பாததூளி இப்பவனத்தைப் பாவன மாக்காதோ? *யந்மநீஷி பதாம்போஜரஜ: கணபவித்ரிதம், தசேவ ஸவநம் தோசேந் ஸகாரஸ் தத்ர லுப்யதே* என்ற ஸாமாந்யத்தோடு நில்லாமல் திருக்கோட்டியூர் விசேஷமும் கூடிற்றே' என்று ஸாதித்தார்.

**57.** *கோழியழைப்பதன் வியாக்கியான ப்ரவேசம். ஸ்ரீபெரும்பூதூரில் சதுச்சாஸ்த்ர வித்வானாய் விளங்கியிருந்த (கீர்த்தி மூர்த்தியான) ஸ்ரீமத் காழியூர் ஸ்ரீரங்காசார்ய ஸ்வாமி நாற்பதாண்டுகட்குமுன் ஒருஸமயம் தேவப்பெருமாளுடைய வையங்கண்ட வைகாசி யுத்ஸவம்ஸேவிக்க இவ்விட மெழுந்தருளியிருந்தார். இயல்கோஷ்டியைத் தவறாது அநுபவித்து வந்தார். ஆறுவது திருநாள் இரவு யானைவாஹனத்தன்று பெருமாள் கங்கைகொண்டான் மண்டபத்திலிருந்து மீண்டருளுகையில் நாச்சியார் திருமொழி தொடங்கி இயல் ஸேவை நடக்கிறது. இரு நூறு திருநாமங்கள் அத்யாபகஸ்வாமிகள் விண்ணுலகிலும் ஒலிக்குமாறு ஸேவித்து வருகிறார்கள். *கோழியழைப்பதன் முன்னம்* என்கிற திருமொழி ஸேவையாகி வருகிறது. பேரின்பவெள்ளத்தில் ஆழ்ந்துவருகிறோம். ஸ்ரீரங்காசார்ய ஸ்வாமி, பக்கத்திலிருக்கும் அடியேனைக்கேட்கிறார்—அண்ணா! இத்திருமொழியின் வியாக்கியான அவதாரிகை ஸேவித்ததுண்டோ? நினைவிருக்கிறதோ? என்று. அதுகேட்ட அடியேன் "ஞாபகமில்லை; விசேஷம் ஸாதித்தருளவேணும்" என்றேன். உடனே கண்ணீர் மிகக்கலங்கி "ஆச்சரியமான அவதாரிகை" என்றார். இல்லம் சேர்ந்த பிறகு ஸ்ரீகோசமெடுத்து ஸேவித்தேன். ஏற்கனவே ஸேவித்திருந்தாலும் அபூர்வமாகவே யிருந்தது. அப்போது அதைப்பற்றி ஒரு பத்திரிகையில் வெளியிட்டேன். "ஸம்ஸாரத்தில் ஒருவர்க்கு அஸஹ்யமான சோகமுண்டானால் *கோழியழைப்பதன் வியாக்கியான ப்ரவேச ஸ்ரீஸூக்திகளை ஸேவித்துத் தணிவது" என்று...அந்த ஸ்ரீஸூக்திகளை இங்கு அப்படியே உதாஹரிக்கிறேன் காண்மின்;—

"தொட்டுதைத்து நலியேல்கண்டாய்" என்னும்படியாக வந்து ஸ்பர்சித்து, அநந்தரம், "எம்மைப்பற்றி மெய்ப்பிணக்கிட்டக்கால்" என்னும்படியே இருவரும் இரண்டு உடம்பாயிருக்கை யன்றிக்கே ஒருடம்பென்றே ப்ரதிபத்தி பண்ணலாம்படி ஸம்ச்லேஷம் ப்ரவ்ருத்தமாய், அப்படி வ்ருத்தமான ஸம்ச்லேஷந்தான், காய்ந்து



ஸ்ரீமதுபயவே திருமலை விஞ்சிமூர் K தாதாசாரியர் ஸ்வாமி, ஸ்ரீ வில்லிபுத்தூர். நேற்று தை மாதத்தில் ஸ்ரீ வசன பூஷண காலக்ஷேப சாத்துமுறை கோஷ்டி.

பொருந்துமாப் போலே பிரிந்து கூடாவிடில் இரண்டுதர்மியும் அழியுமளவாக, இத்தை யநுஸந்தித்து, இவர்களுடைய பந்து வர்க்கமானது சிறு பெண்களை யிழக்க வொண்ணாது, இப்படி பிறந்து நின்ற பின்பு இனி போக்கடி யென் ? என்று பார்த்து, இவர்களைக் கொண்டுபோய் நிலவறைகளிலேயடைக்க; அவர்களும், பிரிவாற்றமாட்டாமே, *உபவாஸக்ருஶாம் தீநாம்* என்றுசொல்லுகிறபடியே ஆற்றாமையெல்லாமுடையராய், இவனும் *ந மாம்ஸம் ராகவோ புங்க்தே* என்றும் *நைவ தம்ஶாந் ந மஶகாந்* என்றும் பெருமாள் கடித்ததும் ஊர்ந்ததும் அறியாதேயிருந்தாப்போலேயிருந்தது; அதுக்கடி யென்னென்னில், *த்வத்கதேநாந்தராத்மநா* பரகாய ப்ரவேஶம் பண்ணியிருப்பார்க்கும் ஒன்று தெரியுமோ, தமக்குணர்த்தி யுண்டாகிலன்றோ அவையறியவல்லராவது என்னும்படியாய், இவர்களொருக்கால் உறங்காதிருக்கில், *அநித்ரஸ்ஸததம்* என்னும்படியாய், இத்தலை *ஊர்த்வம் மாஸாந்ந ஜீவிஷ்யே* என்னில்; *ந ஜீவேயம் க்ஷணமபி* என்கிறபடியே ஒரு க்ஷணமும் ஜீவிக்கமாட்டாதபடியிறே அவன்படி. இப்படி இரண்டு தலைக்கும் ஆற்றாமை கரைபுரண்டிருக்க, பெண்களுடைய தஶையையநுஸந்தித்த பித்ராதிகள், இவர்களை நாம் முடிய நிரோதிக்கில் இழக்குமத்தனையாயிருந்தது. நாமே சேர்த்துவிட்டோமாக வொண்ணாது, இனி யிங்ஙனே ஒரு வழியிடுவோம், பெண்கள் வரலாபத்திற்காகப் பனிநீராட என்றொன்றுண்டு செய்து போருவது, அத்தை இவர்கள் செய்வார்கள்; தங்கள் நினைவிலேயதுவும் பலிக்கிறது. நாம் இதுதன்னையறிந்தோமாகாதொழிகிறோம் என்று இவர்கள் தாங்கள் தங்களிலே ஸமயம் பண்ணியிருக்க; அவனும், பிரிந்தபோதே தொடங்கி இவர்களிடையாட்டம் ஆராயுமதுவேயிறே யவனுக்குப் டணி, ஆகையாலே தான் பிரிந்தபின்பு பிறந்தவையடைய பஞ்சலக்ஷங்குடிக்காட்டில் பெண்களுக்குத் தனித்தனியே ஆளிட்டு ஆராய்ந்து ஊரில் பிறந்த விஶேஷங்களும் பிறக்கிறவையும் பிறக்கப் புகுகிறவையும் அறிந்து, இப்படி பனிநீராடப்போவதாக அத்யவஸித்திருந்



ஸ்ரீமதுபயவே.
முதலியாண்டான் பெரிய ஸ்வாமி. ஸ்ரீ ஶைலாசார்ய ஸ்வாமியுடன் அடியேன்.

---

தார்களென்று கேட்டு. தானும் ஒக்கப்போவதாகக் கணிசித்திருக்க, அவர்களும் இவனோட்டை ஸம்ஶ்லேஷந்தான் பொறுக்கப்போகாது. அதுக்குமேலே விஶ்லேஷ வ்யஸநந்தான் பாடாற்றப் போகாது. ஸம்ஶ்லேஷமோ விஶ்லேஷாந்தமாயல்லதிராது. ஆனபின்பு. அவனோடே ஸம்லேஷித்துப் பின்னைப்பிரிந்துபடும் வ்யஸநத்திற்காட்டில், முன்புற்றைவிரஹ ஜ்வரத்துக்குப் பரிஹாரமாக நீரிலேபோய் முழுகி அத்தால் வந்த ஆஶ்வாஸத்தைப் பெற்றிருக்கவமையும்; அது செய்யுமிடத்தில் நாமும் அவனுமாய் முன்பு குளித்துப் போரும் பொய்கையிலே போகில் அவனறிந்துவரும்; ஆனபின்பு, அவனறியாத தொரு பொய்கை தேடிப்போகவேணும்; அது செய்யுமிடத்தில் திரளப்போகில் அவனறியும்; ஆனபின்பு, ஒருவரொருவராகப் போவோம்; போமிடத்திலும் வழி தெரியாதபடி இட்ட அடியை அழித்துக்கொண்டுபோவோம் என்று எல்லாரும் போனார்கள்; அவ்வளவிலே, இவனும் இவர்களைப் பெறுகைக்கு எதிர்சூழல்புக்குத் திரிவானொருவனிறே; இவர்கள் நினைவையறிந்து, இனித்தான் திருவயோத்யையி லுள்ளாரைப்போலே வழிமாறிப்போனாள் அறிந்திலோம என்று மீளும் இளிம்ப னன்றே; இயேஷ பதமந்வேஷ்டும் சாரணசரிதே பதி என்கிறபடியே அடியொத்தி னான். இவன் தான் "இருளன்னமாமேனி" என்கிறபடியே இருளோடே விகல் பிக்கலாயிறே திருமேனியிருப்பது. ஆகையால் ச்சாயாவானை ச்சாயை பின்செல்லு மாப்போலே, இவர்கள் நிழலிலேயொதுங்கிப்போய் முற்பட்டுக் கரையைப்பற்றி னான்; இவர்களும் இடைப்பெண்களாகையாலே பரியட்டங்களையும் ஆபரணங்களையு மடையக் கரையிலே யிட்டுவைத்துப்போய் ஜலத்திலே அவகாஹித்தார்கள்; அவ் வளவிலே இவற்றையடைய வாரிக்கொண்டு பெரிய வேகத்தோடே போய்க் குருந் தின்மேலேயேறித் தன்னைத் தெரியாதபடி மறைய நின்றான்; இவர்களும் கரை யிலேயேறிப் பார்த்தவிடத்தில் அவை காணாமையாலே 'இருந்தபடியென்!' என்று துணுக்கென்று, நம்முடன் கூடவந்தாரொருவருமுண்டோ, இது ஆகாஶம்கொண் டதோ, திக்குகள் கொண்டதோ, இக்குளம் கொண்டதோ, க்ருஷ்ணன் கொண் டானோ என்று இங்ஙனே கலங்கி, (கிந்நுஸ்யாத் சித்தமோஹோயம்) என்கிறபடியே திருவடி - முன்னேயிருந்து வார்த்தை சொல்லாநிற்கச்செய்தேயும் இது இந்நிலத்தில்



1. ஸ்ரீமதுபயவே. தட்டை ஸுந்தரவரதாசாரியர். 2. ஸ்ரீமதுபயவே. அத்தி. நரஸிம்ஹாசாரியர்.

(இவ்விருவரும் திருவெவ்வுளூர் ஸ்ரீ வீரராகவன் ஸன்னிதி அர்ச்சகர்கள். ச்ரோத்ரியர்கள்.

ஸம்பவிப்ப தொன்றல்ல என்றிருந்தபடியாலே இது சித்தஸ்சலநப் பிறந்ததோ! என்றும். (உந்மாதஜோவிகாரோ வா ஸ்யாதியம் ம்ருகத்ருஷ்ணிகா) என்கிறபடியே இது உந்மாதமோ, ப்ரக்ருதிவிகாரம் பிறந்ததோ, இது இருந்தபடி யென்னென்று ஶங்கித்து பின்பு தெளிந்தாப்போலே. இவர்களும் அநேகத்தை ஶங்கித்து, இவர்கள் எங்கும் பரகுபரகு என்னப்பார்த்துக்கொண்டு வாராநிற்க; இவனைக் குருந்தின்மேலே கண்டார்கள்; கண்டவநந்தரம் "இவன் நம்மை மடிபிடித்துவந்தான், நாமும் இவனை மடிபிடித்து வாங்கினோமாம் விரகேதோ" என்று பார்த்து, இவனை இரப்பார், ஏத்துவார், வாழ்த்துவார், சீறுவாராய், இவனை இப்படி தீம்பு செய்யப் பெற்றுவிட்ட தாயுமொருத்தியே! என்று அவளை வெறுப்பார், தங்கள் ஆற்றாமையை யறிவிப்பாராய்: இப்படி பஹுப்ரகாரங்களாலும அநுவர்த்திக்க; அவனும் பரியட்டங்களும் கொடுத்து ஸமச்லேஷித்தானாய்த் தலைக்கட்டுகிறது." [இவ்வளவும் அவதாரிகை.]

**58 திவ்யப்ரபந்த ஸேவையும்—வேதபாராயணமும்.** ஸன்னிதிகளிலும் மடங்களிலும் திருமாளிகைகளிலும் திவ்யப்ரபந்தம் ஸேவிக்குபபோது சில அவஸரங்களில் முன்னடி பின்னடி க்ரமம் ஸேவிப்பதென்பது ப்ரஸித்தமாக அனைவருமறிந்தது. (அதாவது—) ஒரு பாசுரத்தைப் பூர்வார்த்தம் உத்தரார்த்தம் என்று இரண்டு பகுதியாக்கி ஒரு சாரார் முற்பகுதியில் சில சொற்களையும், மற்றொரு சாரார் பிற்பகுதியில் சில சொற்களையும் ஸேவித்து முடிப்பது முன்னடி பின்னடி ஸேவாக்ரமமெனப்படும். இப்படி ஸேவிப்பது நியாயந்தானா? இது எப்போது யார் ஏற்படுத்தின க்ரமம்? சில பதங்களை அறவே விட்டிடுவது முறையாகுமா? என்று பலர் கேட்பதுண்டு; இதைப் பலர் பரிஹஸிப்பதுமுண்டு, இங்ஙனே விசாரம் செய்யத்தக்க நீதியோ அநீதியோ வடமொழி வேதத்திலும் ஒருவருடைய புத்திக்கு மெட்டாத காலத்திலிருந்து பெரும்பான்மையாக ஸ்மார்த்த மாத்வ ஸ்ரீவைஷ்ணவ கோஷ்டிகளிலெங்கும் நிகழ்ந்து வருவதை உணர்த்துகிறேன். முதலில் ஓரிடங்காட்டிப் பிறகு பலவிடங்கள் காட்டுகிறேன். அநிவார்யமான நிர்வேதத்தை ஸஹித்துக் கொண்டே காட்டுகிறேன். நாம ஓதிவரும் தைத்திரீய ஸம்ஹிதையில் முதல் காண்டம் நாலாவது ப்ரச்நத்தின் முடிவு வாக்கியம்—"உக்நே சுசயஸ் தவ விஜ யோதிஷா" என்பது. இதற்கு என்ன அர்த்தம் தெரியுமோ? ஊன்றிக் கேண்மின்.



ஸ்ரீமதுபயவே. V, N. வெங்கடவரதாசாரியர் ஸ்வாமி அட்வகேட். கோயில் திருமலை பெருமாள்கோயில் தர்சனஸ்தாபகர். வேதவிலாஸ். (எழுப்பூர்)

*உக்ஷ்க்நே சுசயஸ் தவ சுக்ரா ப்ராஜந்த ஈரதே, தவ ஜ்யோதீம்ஷ்யர்ச்சய:* என்று கீழேமூன்றும் ப்ரச்நத்தில் ஓதப்பட்ட ருக்கையும், * விஜ்யோதிஷா ப்ருஹதா பாத்யக்நிராவிர் விச்வாநி க்ருணுதே மஹித்வா, ப்ராதேவீர் மாயாஸ் ஸஹதே துரேவாச் சிசீதே ச்ருங்கே ரக்ஷஸே விநிக்ஷே* என்று கீழே இரண்டாம் ப்ரச்நத்தில் ஓதப்பட்டுள்ளருக்கையும் ப்ரக்ருத ஸ்தலத்தில் ஓத வேண்டியது என்றபடி. அப்படி ஓதிவருகிறார்களா? என்றால் இல்லை, இல்லை, இல்லை. மேலே விவரித்துக்காட்டின இரண்டு ருக்குகளில், ஒன்றில் நான்கு பதங்களையும். மற்றொன்றில் இரண்டு பதங்களையும்மட்டுமே ஓதிவருகிறோம்.

மேலுங் கேண்மின். மேலே (2-2 முடிவில்) *ஹிரண்ய கர்ப்ப ஆபோ ஹ யத் ப்ரஜாபதே* என்றொரு வாக்கியம். இதற்கு என்ன அர்த்தம்தெரியுமோ? மேலே நாலாவது காண்டத்தில் முதல் ப்ரச்நத்தில் ஓதப்படவிருக்கிற * ஹிரண்யகர்ப்பஸ் ஸமவர்த்ததாக்ரே பூதஸ்ய ஜாத: பதிரேக ஆஸீத்...இத்யாதியான ருக்கையும், அதேயிடத்தில் ஓதப்படவிருக்கிற *ஆபோ ஹ யந்மஹதீர் விச்வமாயந்........." இத்யாதியான ருக்கையும், கீழ் (1–8ல்) ஓதப்பட்ட *ப்ரஜாபதே ந த்வதேதாந்யந்ய:......இத்யாதியான ருக்கையும் இங்கே ஓதவேண்டியது என்றபடி. ஓதுகிறார்களோ? இல்லை இல்லை இல்லை. கீழே ஓதப்படாமல் இனி நாலாவது காண்டத்தில் ஓதப்படவிருக்கிற ருக்குக்களைக் கூடப் பூர்த்தியாக ஓதாமல் ஒரு பதத்தையும் மூன்று பதங்களையும் ஓதிநிற்பது நீதியாகுமா? *இந்த்ரம் வோ விச்வதஸ்பரீந்த்ரம் நரோ மருதோ யத்தவோ திவோ யா வச் சர்ம* என்றவாக்கியத்திலும்நான்குருக்குக்கள்.*ஆயுஷ்ட ஆயுர்தா அக்ந ஆப்யாயஸ்வ ஸம் தே அவ தே ஹேட உதுத்தமம் ப்ரணே தேவ்யா நோ திவோக்நாவிஷ்ணூ அக்நாவிஷ்ணூ இமம் மே வருண தத்த்வாயாம் யுதுத்யம் சித்ரம்* என்கிற வாக்கியத்தில் பதினான்கு ருக்குக்கள்......ஆக இப்படி எத்தனையிடங்கள் காட்டலாம், (4-1ல்)* விச்வே தேவா விச்வே தேவா:* என்றொரு வாக்கியம். (2-4ல்) கடைசி யநுவாகத்தில் ஓதப்பட்ட இரண்டுருக்குக்களின் ஸம்க்ஷேபம் இது. எம்பெருமானார் அருளிச்செய்த சரணாகதிகத்யத்தில் இடையில் (அத்ர த்வயம்) எனபதொன்று. இங்கே த்வய மென்கிற மந்த்ரரத்நத்தை உபாம்சுவாக அநுஸந்திக்கவேணுமென்றபடி. குருமுகமாகக் கற்றவர்கள் இப்படி செய்துவருகிறார்கள். பெரும்பாலோர் (அத்ர த்வயம்) என்றே கத்திப்போருகிறார்கள். காடகம் மூன்றுவது ப்ரச்நம் தொடக்கம் *துப்யம் தா அங்கிரஸ்தமாச்யாம தம் காமமக்நே* என்பது.



1. ஸ்ரீமத்பரமஹம்ஸ ஸ்ரீ பெரும்பூதூர்எம்பார் ஜீயர்ஸ்வாமி அப்பன்சடகோபராமாநுஜ ஜீயர்
2. ஸ்ரீ உ. வே. கபிஸ்தலம் A ஸ்ரீநிவாஸாசாரியர். "ஸத்ஸம்ப்ரதாய ரத்னதீபர்".

இங்கு ஸ்ரீ ஜீயர்ஸ்வாமி பக்கத்திலே நிற்கின்ற ஸ்ரீமான் கபிஸ்தலம் A. ஸ்ரீநிவாஸாசாரியாருடைய ஆசார்ய பக்தியையும், ஸம்ப்ரதாய ஜ்ஞான ஸம்ருத்தியையும் நெடுநாளாகக்கண்டு உகந்துவருமடியேன் (P. B. A) நேற்றை மார்கழித் திங்களில் *கூடாரைவெல்லுஞ்சீர்ப் பாசுரத்தன்று சென்னை மாம்பலம் சாரதா நடுநிலைப் பள்ளியில் நடைபெற்ற திருப்பாவைஸதஸ்ஸில் இவர்க்கு

## ஸத்ஸம்ப்ரதாய ரத்னதீபம்

### என்கிற விருதை யளித்தேன்

ஸபாத்யக்ஷ ஸ்வாமிகளும், ஸதஸ்யர்களான வித்வான்களும் பிறரும் கரகோஷத்துடன் ஆமோதித்தார்கள். 11—1—1976.

இதுவும் ஸம்ஹிதையிலுள்ள இரண்டு ருக்குக்களின் ஸம்க்ஷேபம். உபநிஷத்தில் *அத்ப்யஸ் ஸம்பூதோ ஹிரண்ய கர்ப்ப இத்யஷ்டௌ* என்றவிடம் தலையானது. (இதி அஷ்டௌ) என்கிற இரண்டு பதங்கள் யாருடைய வாக்கு? என்பது தெரிய வேணும். வேதவாக்கா இது? ஸம்ஹிதையிலும் இப்படிச் சொல்லியிருக்கலாமே.

இங்கு முக்கியமான ஆராய்ச்சி யொன்று. வெவ்வேறிடங்களிலுள்ள ருக்குக்களை ஓரிடத்தில் எடுத்துச் சேர்க்கும்போது பதபாடம் ஒன்றுதவிர மற்றஸம்ஹிதை க்ரமம் ஜடை கனங்களில் ஸந்தி செய்திருப்பது யாருடைய காரியம்? *ஆயுஷ்ட ஆயுர்தா அக்ந ஆப்யாயஸ்வ ஸம்தேவதே......என்கிற வாக்கியத்தை யெடுத்துக் கொள்வோம். இதில் இரண்டாவது பதமான (தே) என்பதற்கும் (ஆயுர்தா:) என்கிற பதத்திற்கும், மேலே (அக்நே) என்கிற பதத்திற்கும் (ஆ) என்கிற பதத்திற்கும் ஸந்திபண்ணி யிருக்கக் காண்கிறோமே; இது வேதபுருஷன் செய்ததாக இருக்கக்கூடுமா? ஒரு ருக்கின் ஏகதேசத்தை இன்னொரு ருக்கோடு ஸந்திபண்ணத் தகுமா ? இதை அர்வாசீந கல்பனை யென்றுதானே சொல்லவேணும்?

இங்கு முடிவாக விஜ்ஞாபிக்கிறேன். இக்கேள்விகள் நாம்கேட்கத்தகாது.பிறர் நம்மை நோக்கிஇக்கேள்விகளைக்கேட்டால்நாம் விடைகூறியேயாகவேண்டுமன்றோ?



ஸ்ரீமான் Dr. V. V. ராமாநுஜம் ஐயங்கார், Ph. D.,
திருவல்லிக்கேணி வேதவேதாந்த வர்த்தினி ஸபா
(காரியதரிசி)

ருக்குகளைப் பூர்த்தியாக ஓதவேண்டியிருக்க பலபல பதங்களைத்தள்ளிவிட்டு ஓதுவது நியாயமன்றுதான். ஆனால் இந்த பத்ததியை இனி யாரும் மாற்ற முடியாது. இதேபோல் முன்னடி பின்னடி க்ரமமான திவ்யப்ரபந்த ஸேவையிலும் பல சொற்கள் விட்டுப் போவது ஆக்ஷேபிக்கத்தக்கதன்று என்றே கொள்ள வேணும். "பல்அடிவாழேடண்டம் எந்தை நீநெய் யுடுத்து எந்நா ளல்வழக்கு பல்லாண்டுவண்ணப்—வண்ணமோடு பேணியுறி, கொண்ட கைகொய்பத்து கிடக்கில் செந்நெல் சீதப்"என்று இங்ஙனே ஸேவிக்குமொருபத்ததி ஏற்பட்டாலும் அதுவும் வேதமார்மாநுஸாரியே யாகும்.

எந்த ருக்கையும் ஒருமுறைக்குமேல் மறுமுறை பூர்த்தியாக ஓதுவதில்லை—என்பதும் கிடையாது வேதத்தில்; "ஆபோ ஹிஷ்டா மயோபுவ;..." உதுத்யம் ஜாதவேதஸம்..."வாஜஸ்ய மா ப்ரஸவேந..." அக்ந ஆயூம்ஷி பவஸே......இத்யாதிகளான பலருக்குக்கள் அஸக்ருத் பூர்த்தியாக ஓதப்பட்டிருக்கின்றனவே! ஓதிவருகிறோமே. வைதிகர்களினுடைய அவதானத்தில் முக்கியமாக இருக்கவேண்டிய விஷயம் இதுவென்று கொண்டு விஜ்ஞாபித்தபடி. வேதப்ராதுர்ப்பாவம் இப்படியன்று—என்றுமட்டும் திண்ணமாக எண்ணியிருக்கிறேனடியேன்.

**59. அல்பபண்டிதனால் பிரபலபண்டிதர் பரிபவப்பட்டது.** ஸாமான்யஜனங்கள் வாழும் ஓர் அக்ரஹாரத்தில் சில காவ்யநாடகங்கள்மட்டும் வாசித்த ஒருவர் ஏதோ பிரவசனம் செய்துகொண்டிருந்தார். "நிரஸ்தபாதபே தேசே ஏரண்டோபி த்ருமாயதே" என்கிறகணக்கிலே அவரைப் பெரியபண்டிதராகவே மருண்டு அவரை பஹுமானித்து வந்தார்கள். இப்படியிருக்கையில், வெளியூரிலிருந்து ஓர் உண்மையான வித்வான் அவ்வூருக்குவந்து சேர்ந்து ப்ரவசநம் ஆரம்பித்தார். அவர் கல்விக்கடலாகையாலே ச்ரோதாக்கள் பலபேர்கள் அவரை அணுகத்தொடங்கினார்கள். அல்பபண்டிதரிடம் வருபவர்கள் நாளடைவில் குறைந்துவருகிறார்கள். அப்போது அந்த அல்பஜ்ஞர் ஒவ்வொருவரையுமழைத்துச் சொல்லுகிறார்—"முழுமூடர்களாயிருக்கிறீர்களே; அவனுக்கு என்னதெரியுமென்று அவனிடம் ஓடுகிறீர்கள்? நான் கேட்கிற கேள்விகளில் ஒன்றுக்காவது அவன் பதில் சொல்லமுடியுமா? போய்க்கேளுங்கள்.—ஞாயிற்றுக்கிழமையன்று மாலைப்பொழுதில் ராஹுகாலமென்றும், திங்கட்கிழமைகளில் காலைப்பொழுதில்ராஹுகாலமென்றும், புதன்வியாழன்களில்பகற்பொழுதில் ராஹுகாலமென்றும் ஏற்பட்டிருக்கிறதே, என்னகாரணமென்று போய்க்கேளும். சந்த்ரக்ரஹணம்பௌர்ணமியில் பிடிப்பானேன்? ஸூர்யக்ரஹணம் அமாவாஸ்யை



பிரம்மஸ்ரீ லக்ஷ்மீகாந்தசர்மா நித்யாக்னி ஹோத்ரி (லலிதாபார்மஸி) கும்பகோணம் ஞானுனுஷ்டான நிதி.

யில் பிடிப்பானேன்? இதில் முழுக்ர ஹணம். அரைகுறை க்ரஹணம் என்று ஏற்பட்ட தற்கும் என்ன காரணம்? த்வாதசியன்று ஸூர்யக்ரஹணம் வந்தால்பாரணைபண்ணி விட்டுத்தர்ப்பணம் பண்ணுகிறதா? தர்ப் பணம் பண்ணிவிட்டுப் பாரணைபண்ணு வதா? இதையுங்கேளுங்கள்—என்றிப்படிச் சிலகேள்விகள் சொல்லியனுப்பினர். அவர் களும் அவரிடம் சென்று கேட்டார்கள். அவர் பிராமாணிகராகையாலே இதற் கெல்லாம் யாரால் ஸமாதானம் சொல்ல முடியும்? என்றார் ஜடஜனங்களெல்லாம்: அவரைவிட்டுப் பழையபடியே இவரிடம் திரும்பிவிட்டார்கள். அவர், இனி இங்கு நம்மால் வாழமுடியாதென்று மூட்டைக்கட்டிக்கொண்டு போய்விட்டனர்.

**60** ஒரு ஜீயர் ஸ்வாமியின் அநுஸந்தான விசேஷம். விசேஷமாக வாசித்தறி யாதவொருவர் உத்தமாச்ரமஸ்வீகாரம் செய்துகொண்டார்; மடாதிபதியுமானர். வைபவம் ஓங்கிவிட்டது சிஷ்யர்களுடன் திவ்யதேசயாத்திரையென்று புறப்பட் டார். ஒருவித்வானையும் கூடஅழைத்துக்கொண்டார். யாத்திரை வைபவமாகநடந் துவருகிறது. ஒவ்வொரு திவ்யதேசத்திலும் விசேஷமான மரியாதைகள் நடத்தி வருகிறார்கள். பரிவட்டங்கட்டி ஸ்ரீசடகோபன் பஞ்சமுத்ரைஸாதித்து வருகிறார்கள். அப்போது இந்தமடாதிபதி வாய்திறந்து ஒன்றும் சொல்லாமலே வாளா இருந்து வந்தார். கூடவருகிறவித்வான் ஒருநாள் அந்தஜீயரிடம் விண்ணப்பம் செய்தார் "அர்ச்சகர் ஸ்ரீசடகோபன் ஸாதிக்கிறபோது தேவரீர் வாளாவிருக்கக்கூடாது. 'தந்யோஸ்மி, அநுக்ருஹீதோஸ்மி, க்ருதார்த்தோஸ்மி' என்று கம்பீரமாக அநுஸந் தானம் செய்தருளவேணும்" என்று சொல்லிவைத்தார். ஜீயரும் அதை யுக்தமே யென்றுகொண்டு அப்படியே அநுஸந்தித்து வந்தார். பெருமாள் ஸன்னிதி ஸேவித் தபிறகு தாயார்ஸன்னிதிஸேவிக்க எழுந்தருள்வரே; அங்கேயும் மரியாதைநடக் குமே. அப்போது ஸ்ரீசடகோபன்ஸாதிக்கும்போது "தந்யாஸ்மி—அநுக்ருஹீதாஸ்மி க்ருதார்த்தாஸ்மி" என்றார். தாயார் ஸன்னிதியாகையாலே, ஸ்த்ரீலிங்கமாகத்தான் சொல்லவேணுமென்று நினைத்துவிட்டார். அப்போது இந்தவித்வான் ஜீயரை உறுத் துப்பார்த்தார். அப்போது ஜீயர் ஸ்வாமி "ராகவாசார்ரே! என்ன உற்றுப் பார்க்கிறீர்? தாயார்ஸன்னிதியிலுங்கூட தந்யோஸ்மி அநுக்ருஹீதோஸ்மி சொல் லிவிடுவேனென்று பார்க்கிறீரோ? பும்லிங்கஸ்த்ரீலிங்கங்கூடத் தெரிந்து கொள்ளா மலா நான் மடாதிபதியாயிருக்கிறேன்?" என்றாராம். அதற்குமேல் வித்வான் சொன்னவார்த்தை ஸுச்யமல்லாமையாலே இங்கு விடப்பட்டது.



## 61 இடையில் ஒரு சிறு விண்ணப்பம்

இப்போது அடியேன் இந்த எண்பத்தைந்து வார்த்தா மாலை எழுதிக்கொண்டிருக்கையில் (1—3—76) திங்கட் கிழமையன்று) டில்லியிலிருந்து Famous India Publications என்ற பதிப்பகத்தாரால் வெளியிடப்பட்ட (LEADERS OF INDIA [WHO'S WHO]) என்ற ஆங்கில வெளியீடு Regd Post-ல் கிடைத்தது. இதில் அடியேனைப் பற்றி வெளிவந்திருப்பதை ஆப்தர்களின் வேண்டுகோளுக்கிணங்க இங்கே வெளியிடுகிறேன்.

"Annangaracharya, Prativadibhayankara, birth 1891 Kancheepuram (Chingleput); Editor, Granthamala publishers—Edited and Published one thousand two hundred and seven books on Vaishnava literature in Sanskrit Tamil, Telugu and Hindi languages, is also publishing monthly literary and religious journals. Address: 29, South Mada Street, Little Kancheepuram (T. N.)

(தமிழ் மொழிபெயர்ப்பு) அண்ணங்கராசாரியர் ப்ரதிவாதி பயங்கரம். பத்திரிகையாளர். பிறப்பு 1891. காஞ்சீபுரம் (செங்கல்பட்டு) ஆசிரியர்; க்ரந்தமாலா பதிப்புக்கள்—ஆயிரத்து இருநூற்றேழு (1207) நூல்கள் எழுதி வெளியிட்டுள்ளார். இவை ஸம்ஸ்க்ருதம், தமிழ், தெலுங்கு மற்றும் ஹிந்தி ஆகிய மொழிகளில் அமைந்துள்ளன. ஸம்ப்ரதாய ஸாஹித்ய ஸம்பந்தமான மாதப் பத்திரிகைகளை மேற்படி நான்கு மொழிகளிலும் வெளியிட்டு வருகிறார்.
முகவரி: 29, தென்னண்டை மாடவீதி, காஞ்சீபுரம்-3. (தமிழ் நாடு)

இந்த வெளியீட்டின் ஆசிரியர் (RAVI BHUSHAN) ஸ்ரீ ரவி பூஷன். இதன் விலை ரூ. 120/- மட்டும்.

முகவரி: FAMOUS INDIA PUBLICATION,
57, Daryaganj, NEW DELHI-110002.

இந்த 1207 நூல்களில் அடியேன் நான்கு பாஷைகளிலும் 16 துறைகளில் சொந்தமாக எழுதிய ஸ்வதந்த்ர நூல்களும் வியாக்கியான நூல்களும் 987. மற்றவை பூர்வாசார்ய ப்ரணீத க்ரந்தங்களின் முத்ரணம் க்ரந்த மாலைகளிற் சேர்ந்தவை. ... ... ... ...



ஸ்ரீமதுராந்தகம் ஸ்ரீ அஹோபிலமட ஸம்ஸ்க்ருத காலேஜ் வித்வான்கள்;

1. ஸ்ரீமத் உ. வே. தையார் வங்கீபுரம ரங்கராஜாசாரியர் நையாயிகர்
2. ,, திருமலைச்சப்பாடி ராமஸ்வாமி ஐயங்கார் M. A. L. T, (Principal)
3. ,, பாதூர் ராகவாசாரியர், வையாகரணர்.
4. ,, வீரவல்லி வாஸுதேவாசார்யர், ஷ (உத்தரமேரூர்.)

**62. அருளிச்செயலில் ஒருவிசேஷம்.** திருவரங்கம் பெரியகோயிலில் நிகழும் ஸம்வத்ஸரத்தில் கார்த்திகை மாதத்திலேயே பசற்பத்துத் திருநாள் நடந்தபடியால்ஸேவிக்கவிடைகொண்டிருந்தேன். அங்கு ஸ்ரீமத் பரமஹம்ஸ ஸ்ரீமந்நாராயண ராமாநுஜ ஜீயர் ஸ்வாமியும் ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சநபத்ராதிப ஸ்வாமியும் நியமித்தருள, நாடோறும் இரவில் 7 மணி முதல் மணவாளமாமுனிகள் ஸந்நிதியில் ஏதோ விண்ணப்பஞ்செய்துவந்தேன். ஸந்நிதியில் அரையர் ஸேவையில் மூன்றாந்திருநாளில் பெரியாழ்வார் திருமொழிசாத்துமுறையில் *திருப்பொலிந்தசேவடிநிகழ்ச்சிவிசேஷமுண்டாதலால், அன்றைய மாமுனிகள் ஸந்நிதியுபந்யாஸ கோஷ்டியில் *பருப்பதத்துக்கயல் பொறித்த பாண்டியர் குலபதிபோல், திருப்பொலிந்த சேவடி யென் சென்னியின்மேல் பொறித்தாய்* என்கிற பாசுரத்தை ப்ரஸ்தாவித்துச் சில வார்த்தைகள் விண்ணப்பஞ்செய்யநேர்ந்தது. "பர்வதம் என்னும் பொருளில் பருப்பதம் என்கிற சொல்லைப் பிரயோகித்தவர்கள் பெரியாழ்வாரும் ஆண்டாளும்; பெரியாழ்வார் பிரயோகம் தெரிந்துவிட்டது; ஆண்டாள் பிரயோகம் நாச்சியார்திருமொழியில் (14-6) *உருவுகரிதாய்முகஞ்செய்தாய் உதய பருப்பதத்தின் மேல்* என்றவிடத்தில்—என்றேன். ஸ்ரீமதுபயவே. க்வாளியர் ஸத்யமூர்த்திஸ்வாமி அங்கே பூர்த்தியாக அநுபவித்திருந்தபடியால், உபந்யாஸம் முடிந்தபிறகு அடியேனிடமெழுந்தருளி "இன்று பருப்பதத்தைப்பற்றி ஸாதித்தது அடியேனுக்கு அபூர்வமாகவும் விசேஷமாகவும் தோன்றிற்றுஸ்வாமீ; இப்படி விசேஷவிஷயங்களை தேவரீர் எழுதிவைக்க வேணும் என்றார். அப்போது பெரியாழ்வாரும் ஆண்டாளுமாகிய இருவருடைய ப்ரயோகங்களைப்பற்றிமட்டும் விண்ணப்பஞ்செய்தேன். அவற்றை இங்கே உலகமறிய வரைகின்றேன்;—

1 அருங்கலம்—*அருங்கலவுருவினாயர்பெருமானவன் (பெரியாழ்வார்)
*ஆற்றவனந்தலுடையாயருங்கலமே. (ஆண்டாள்)

2 அண்ணாந்து—*கூனற்பிறை வேண்டியண்ணாந்து நிற்கும். *(பெரியாழ்வார்)
*சிசுபாலன் தேசழிந்து அண்ணாந்திருக்கவே* (ஆண்டாள்)

3 இந்திரகோபம்—*இந்திரகோபங்களெம்பெருமான்கனிவாயொப்பான் (பெரி.)
*இந்திரகோபங்களேயெழுந்தும் பரந்திட்டனவால்*(ஆண்டாள்)

4 ஒட்டரா—(ஓடியென்றுபொருள்) *என்னிடைக்கோட்டராவச்சோ* (பெரி.)
*ஒட்டராவந்தென்கைப்பற்றி* (ஆண்டாள்)



ஸ்ரீமான். K, A. தேவராஜாசாரி (மேதாவி பண்டிதரத்னம். கைங்கர்ய துரந்தரர்) சென்னை.

5. கண்ணாலம்—*நாடுநகருமறிய நல்லதோர் கண்ணாலப்* (பெரியாழ்).
*கண்ணாலங்கோடித்துக் கன்னி -தன்னை* (ஆண்டாள்)

6. குப்பாயம்—(சட்டை)*குப்பாயமெனநின்று காட்சிதரும். (பெரியாழ்)
*போர்த்தமுத்தின் குப்பாயப் புகர்மால்* (ஆண்டாள்)

7. கருப்பூரம்—*பங்கயம் நல்ல கருப்பூரமும் நாறிவர* (பெரியாழ்)
*கருப்பூரம்நாறுமோ கமலப்பூ நாறுமோ* (ஆண்டாள்)

8. கோதுகலம்—*கோதுகலமுடைக்குட்டனேயோ* (பெரியாழ்வார்)
*கோதுகலமுடைய பாவாயெழுந்திராய்* (ஆண்டாள்)

9. புண்ணில்புளிப்பெய்தால்—*புண்ணிற்புளிப்பெய்தாலொக்குந்தீமை (பெரி.)
*புண்ணிற் புளிப்பெய்தாற்போல* (ஆண்டாள்)

10. பாஞ்சன்னியம்—*அப்பாஞ்சசன்னியமும்பல்லாண்டே* (பெரியாழ்)
*பாஞ்சசன்னியத்தைப் பற்பநாபனோடும்* (ஆண்டாள்)

11. வில்லிபுத்தூர்—*வில்லிபுத்தூரினிதமர்ந்தாய்! உன்னைக் கண்டார்* (பெரி)
*வில்லிபுத்தூருறைவான் றன்பொன்னடி* (ஆண்டாள்)

12. வெள்ளைவிளிசங்கு—*வெள்ளைவிளிசங்குவெஞ்சுடர்த்திருச்சக்கரம்* (பெரி)
(பருப்பதம்) *வெள்ளைவிளிசங்கின்பேரரவம் கேட்டிலையோ? (ஆண்.)

இவ்வண்ணமாகப் பலவிஷயங்கள் தெரிவிக்கவேண்டியவையுண்டு. ஒவ்வோராழ்வாரையு மெடுத்துக்கொண்டு இவருடைய அஸாதாரணாநுபவமென்ன? இவர் மட்டும் அநுபவித்த அநுபவங்கள் எவை? என்று ஆராய்ந்து தெரிவிக்கவேண்டியதுண்டு; சிறிது தெரிவிப்போம்மேலே. (பிறகு காண்க.)

**63.** [முதல்நக்ஷத்ரம் அச்விநியா? க்ருத்திகையா?] நமதுவேதத்தில் முதலஷ்டகத்தில் இரண்டாமநுவாகம் *க்ருத்திகாஸ்வக்நிமாதததீத* இத்யாதி. உலகில் நாம் நக்ஷத்ரபரிகணனை பண்ணும்போது 'அச்விநீ பரணி க்ருத்திகை, என்று கணக்கிட்டு வருகிறோம். வேதத்தில் க்ருத்திகையே முதலாக வெடுக்கப்படுகிறது. "முகம் வா ஏதந் நக்ஷத்ராணாம். யத்க்ருத்திகா:" என்று இந்த அநுவாகத்தில் ஸ்பஷ்டமாகச் சொல்லப்படுகிறது. ஸம்ஹிதையில் நாலாவது காண்டத்தில் எல்லா நக்ஷத்திரங்களையும் வரிசையாக ஓதிவருமிடத்து 'க்ருத்திகா நக்ஷத்ரமக்நிர் தேவதா'! என்று இதுவே முதலிடப்பட்டது. "அக்நிர் ந: பாது க்ருத்திகா:" இத்யாதிகளும்



Hon'ble Justice. V. Sethuramayyar
High Court Judge-Madras

காண்க. இப்படியிருக்க லோகத்தில் க்ருத்திகைக்கு ப்ரதமகணனும் வாராமைக்கு ஹேதுவென்னென்னில், அதுவும்இவ்வநுவாகத்திலேயே ஸூசிதமாகிறது: [அதோ கலு; அக்நி நக்ஷத்ர மித்யபசாயயந்தி । க்ருஹாந் ஹ தாஹுகோ பவதி.] கீழே இந்த நக்ஷத்திரத்திற்குச் சிறப்புச் சொல்லப்பட்டு, அதற்கு மாறாக இப்போது இழிவு சொல்லப்புகுவதால் (அதோ கலு) என்பது அதற்கு அவதாரிகையாகும். என்ன இழிவு? என்னில், பெரியோர்கள் அக்நி நக்ஷத்ரமென்று இழிவுகூறுகின்றார்களாம். அந்த நக்ஷத்ரத்திலே செய்யும் யஜமானனுடைய வீட்டைக் கொளுத்திவிடும் இந்த தேவதை.........இதையிட்டே லோகத்தில் இந்த நக்ஷத்ரத்திற்கு ப்ரதமபரிகணனை இல்லை போலும். வேறு காரணமும் இருக்கலாம். ... ... ...

... ... ... ...

**64** [ஆஹார நியமத்தைப்பற்றி வேதத்திலுள்ள கட்டளை]. முதலஷ்டகம் நான்காம் ப்ரச்நம் ஒன்பதாமநுவாகத்தில்-பித்ருக்கள், மனிதர்கள், பசுக்கள், அஸுரர்கள் முதலானோர்க்கு போஜனவேளைகள் நியமிக்கப்படுகிறது. மனிதர்களுக்கும் பசுக்களுக்கும் நியமித்திருப்பதை மட்டும் தெரிவிக்கிறேனிங்கு. [தஸ்மாத் த்விரஹ்நோ மநுஷ்யேப்ய உபஹ்ரியதே. ப்ராதச் ச ஸாயஞ் ச... தஸ்மாத் த்ரிரஹ்ந: பசவ: ப்ரேரதே. ப்ராதஸ் ஸங்கவே ஸாயம்] பகலிலும் இரவிலுமாக இரண்டு வேளைகளில் மனிதர்களுக்கு போஜனமென்றும், ப்ராத: காலம் ஸங்கவகாலம் ஸாயங்காலம் ஆகிறமூன்றுவேளைகளில் பசுக்களுக்கு உணவு என்றும் இங்கே ச்ருதி சொல்லுகிறது. சாஸ்த்ரவச்யமல்லாத பசுக்களைப் பற்றி வ்யவஸ்தையேது? அது பற்றி விசாரம் வேண்டா. 'மநுஷ்யேப்ய;, என்று பொதுப்பட மனிதர்களை யெடுத்திருந்தாலும் மானிட வகுப்பில் சாஸ்த்ரங்களுக்குக் கட்டுப்படாத திரள்கள் பல்லாயிரமுண்டே; அவற்றை விலக்கி சாஸ்த்ர வச்யர்களான வகுப்பினரை மட்டுங் கொண்டால் இந்த சாஸ்த்ரம் ஸங்குசித விஷயமாகும். நூல் வரம்புக்குக் கட்டுப்பட்ட பரம வைதிகர்



ஸ்ரீமான் உவே மடவளாகம். திருமலே அனந்தாண்பிள்ளை கோபாலாசாரியரும், அவருடைய மூத்தபுதல்வர் கண்ணனென்கிற வெங்கடவரதாசாரியும். திவ்ய ப்ரபந்த நிபுணர்களிருவரும்.

கள் "ருதம் த்வா ஸத்யேந பரிஷிஞ்சாமீதி ஸாயம் பரிஷிஞ்சதி. ஸத்யம் த்வர்த்தேந பரிஷிஞ்சாமீதி ப்ராத:" என்று பரிஷேசந மந்த்ரம் இரண்டு வேளைகளுக்கு மட்டுமே உள்ளதனுல் இரண்டு வேளைகள் தவிர வேறொரு வேளை எதுவும் உட்கொள்ள மாட்டார்கள். இடைப் பலஹாரங்கள் கடைப்பலஹாரங்கள் இவை அணுகமாட்டா. பகவத் ஸந்நிதிகளில் அகாலங்களில் ப்ரஸாதம் கிடைத்தால் "ஆமலக மாத்ரம் க்ருஹ்ணீயாத்" என்னும் சாஸ்த்ரத்தை யடியொற்றி நெல்லிக்காயளவு ப்ரஸாதம் ஸ்வீகரிப்பர்கள்.

**65** [ஸ்வாதீநக்ஷத்ரத்தைப்பற்றி இரண்டு விஷயங்கள் கேண்மின்] முதலஷ்டகத்தில் ஐந்தாவது ப்ரச்நம் இரண்டாவதநுவாகத்தில்—ஸ்வாதீ நக்ஷத்திரத்தில் விவாஹம் பண்ணிக் கொடுக்கப்படுகிற கன்னிகையைப் பற்றி ஒருவிநோதம் சொல்லுகிறது:— [யாம் காமயேத துஹிதரம் ப்ரியா ஸ்யாதிதி, தாம் நிஷ்ட்யாயாம் தத்யாத், ப்ரியைவ பவதி. நேவ து புநராகச்சதி"]எந்தமகளை பர்த்தாவுக்கு மிகவும் ப்ரீதிபாத்ர மாயிருக்கவேணுமென்று பிதா விரும்புகிருரோ, அந்த மகளை ஸ்வாதீ நக்ஷத்திரத்தில் விவாஹம் பண்ணிக்கொடுக்க வேண்டியது. [நிஷ்ட்யா—ஸ்வாதீ] அப்படியே அம்மகள் பர்த்தாவின் பரமப்ரீதிக்குப் பாத்திரமாகிருள்; அதனுல் அவள் மறுபடியும் பிதாவின் க்ருஹத்தை நோக்கி வருவதே கிடையாது. (இதுஇந்த ஸ்வாதீ நக்ஷத்திரத்திற்கு நிந்தையா? ஸ்துதியா? என்று விமர்சிக்கப் புகுந்தபாஷ்யகாரர் நிந்தையன்று, ஸ்துதிதானென்று நிஷ்கர்ஷிக்கிருர். பிதா விரும்பியபடி பதியின் அதிசயித ப்ரீதியை விளைப்பதனுல் என்று காரணம் காட்டுகிருர்.] ஜநக சக்ரவர்த்தி ஸீதா பிராட்டியை ஸ்வாதீநக்ஷத்திரத்தில் கந்யகாப்ரதானம் பண்ணியிருப்பர் போலும்; "பிராட்டி பெருமாளைக் கைப்பிடித்த வனந்தரம் ஸ்ரீமிதிலேயை நினையாதாப் போலே" என்று ஆசாரியர்கள் அருளிச்செய்வதனுல் (நிற்க.) மற்றென்றுகேண்மின்.

**66.** மூன்ருமஷ்டகத்தில்முதல்ப்ரச்னத்தில் நாலாவதநுவாகத்தில்நக்ஷத்திரங்களுக்குச் சிறப்புசொல்லி வருகையில் ஸ்வாதீநக்ஷத்ரப்ரகரணத்தில் "வாயுர் வா அகாமயத" என்று தொடங்கிச் சொல்லப்பட்டிருப்பதாவது-எல்லா விடங்களிலும் தட்டுத் தடங்கலில்லாமல் யதேஷ்டமாக ஸஞ்சரிக்கப் பெறவேணுமென்று விரும்பிய வாயுதேவதை ஸ்வாதீ நக்ஷத்திரதேவதையைக் குறித்து இஷ்டி செய்ய, அப்படியே பேறுபெற்றதாக ஓதிற்று: தைத்திரீயோபநிஷத்தில் "பீஷாஸ்மாத் வாத:



1, ஸ்ரீமான் மடவளாகம் திருமலை அனந்தாண்பிள்ளை பாஷ்யகாராசாரி. அருளிச்செயல் வல்லவன்
2. ஆயுஷ்மாந் வேணுகோபால் V. கிருஷ்ணஸ்வாமி. (பாலபக்தத்ருவோபம:)

பவதே" என்று பரமபுருஷனிடத்தில் அஞ்சி நடுங்கிக் கொண்டு வாயு எப்போதும் ஓய்வின்றித் திரிந்து கொண்டிருப்பதாக ஓதப்பட்டுள்ளது. தான் இஷ்டி செய்து அதன் பலனைக் காமசாரம் பெற்றிருந்தால் இஷ்டமான போது ஓடவும் ஓய்வெடுத்துக் கொள்ளவுங் கூடுமே; பரமபுருஷனிடத்தில் அஞ்சி நடுங்கவேண்டிய அவசியமில்லையே யென்று இங்குச் சிலர் கேட்கக்கூடும். ஸமந்வயம் பண்ணி நிர்வஹிக்கவேண்டியது பெரியவர்களின் கடமை.

**67**. **கர்மகாண்டத்திலும் பரப்ரஹ்மத்தின் பெருமை.** நாலாவது காண்டம் முதல் ப்ரச்நத்தில் எட்டாவதநுவாகத்தில் *ஹிரண்ய கர்ப்பஸ் ஸமவர்த்ததாக்ரே* என்று தொடங்கி எட்டு ருக்குக்கள் *கஸ்மை தேவாய ஹவிஷா விதேம" என்று ஒரேவிதமான முடிவோடு கூடியவையாய் விளங்குகின்றன. கர்மகாண்டத்திலும் பரப்ரஹ்ம ப்ரபாவ ப்ரதிபாதநமுள்ளதென்று அடியேன் பரக்கவுபந்யஸிப்பதுண்டு. அதற்குப் பொருத்தமாக ஸம்ஹிதையிலும் ப்ராஹ்மணத்திலும் பல ஸ்தலங்கள் எடுத்துக் காட்டப் பாங்கானவையுண்டு; அவற்றுள் இந்த ஸ்தலம் மிக முக்கியமானது. தைத்திரீயோபநிஷத்தில் உத்தரநாராயணத்தில் "அத்பஸ் ஸம்பூதோ ஹிரண்யகர்ப்ப இத்யஷ்டௌ" என்று வைதிகர்களனைவரும் ஸபரீதியாக ஓதிவருகிறார்கள். இங்கு "ஹிரண்ய கர்ப்ப இதி அஷ்டௌ" என்றது ஸம்ஹிதையில் நாலாவது காண்டத்தில் ஓதப்பட்டு வருகிற எட்டு ருக்குக்களையும் இங்கே ஓதவேண்டியது என்றபடி. இவ்விதமாக ஸகல பாஷ்யகாரர்களும் அர்த்தம் செய்திருப்பதனால் இது நிர்விவாதம். இதனால் இந்த எட்டுருக்குக்களும் நாராயணபரங்களென்பது ஸ்பஷ்டமாகத் தேறி நின்றது. இவற்றை வேறொரு தேவதாபரமாக ஒதுக்குவதற்குச் சிறிதும் ஔசித்யம் கிடையாது. இவற்றில் இரண்டு ருக்குக்களைமட்டும் இங்கு விவரிக்கின்றேன். [ஹிரண்யகர்ப்ப: அக்ரே ஸமவர்த்தத.] ஸஹஸ்ர நாமத்தில் "ஹிரண்ய கர்ப்போ பூகர்ப்ப:" என்று ஹிரண்ய கர்ப்பனாகக் கூறப்பட்ட நாராயணனொருவனே முந்துற முன்னமிருந்தனன். அவன் எப்படிப்பட்டவன்? [பூதஸ்ய ஜாத: பதிரேக ஆஸீத்] ஸகல ப்ராணிவர்க்கங்களுக்கும் அத்விதீயசேஷி. இன்னும் அவனுடைய ப்ரபாவம் எத்தகைத்து? [ஸ தாதார ப்ருதிவீம் த்யாமுதேமாம்] அவனே உபயவிபூதி நிர்வாஹகன் ப்ருதிவீம் உத த்யாம் — மண்ணுலகையும் விண்ணுலகையும் என்றபடி. (உத) என்னுமவ்யயம் ஸமுச்சயார்த்தகம். [கஸ்மை தேவாய ஹவிஷா விதேம]



ஸ்ரீமதுபயவே. வித்வான். புரிசை நடாதூர். க்ருஷ்ணமாசாரியர் ஸ்வாமி. ந்ருஸிம்ஹப்ரியா ஸம்பாதகர். ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி. இஞ்சிமேட்டழகிய சிங்கரின் பூர்வாச்ரம தௌஹித்ரர்.

ஸஹஸ்ரநாமத்தில் 'ஏகோ நைகஸ் ஸ வ: க: கிம்' என்றவிடத்தில் (கிம் என்று) கிம் சப்தநிர்திஷ்டனை அந்த நாராயணனுக்கு ஹவிஷ்ய நிவேதநம பண்ணக்கடவோம என்கை. (இந்த எட்டுருக்குக்களும் திருவாராதனத்தில் விநியோகிக்கப்படுமவை) மற்றொரு ருக்கு:— *ய ஆத்மதா பலதா: யஸ்ய விச்வ உபாஸதே ப்ரசிஷம் யஸ்ய தேவா:, யஸ்ய ச்சாயா அம்ருதம் யஸ்ய ம்ருத்யு: கஸ்மை தேவாய ஹவிஷா விதேம] *[ஆத்மதா:]* எற்பரனென்னை யாக்கிக் கொண்டு எனக்கே தன்னைத் தந்த கற்பகம்*என்கிறதிருவாய்மொழியின்படியே முற்றூட்டாக அநுபவிக்கும்படி தன்னையே தருமவன் எம்பெருமான், [பலதா:]—* குலந் தரும்செல்வம் தந்திடும்...வலந்தரும்* என்ற திருமங்கையாழ்வா ரருளிச்செயலின் படியே தன்னை யநுபவிக்கைக் கீடான தேஹபல மனோபலங்களை யருள்செய்பவன், [யஸ்ய ப்ரசிஷம் விச்வே தேவா உபாஸதே]*ஆணைமெய்பெற நடாய தெய்வம் மூவரில் முதல்வனாகி* என்று திருவாசிரியத்திலருளிச்செய்தபடியே எம்பெருமானுடைய ஆணையை ஸகல தேவர்களும் சிரமேற் கொள்ளுகின்றார்கள். ப்ரசிஷம்—ஆஜ்ஞாம் என்றபடி, [அம்ருதம் ம்ருத்யு:—யஸ்ய ச்சாயா] மோக்ஷபூமியும் ஸம்ஸார பூமியும் அவனிட்ட வழக்கு.

**68**. ஐந்தாவது காண்டம் ஐந்தாவது ப்ரச்நம் முதலநுவாகத்தில் ஸ்ரீ மஹாவிஷ்ணுவின் பாரம்யம் ஸுஸ்பஷ்டமாக வோதப்பட்டிருக்கின்றது;— [அக்நிரவமோ தேவதாநாம் விஷ்ணு: பரம:] 'தேவதாநாம்' என்றது நிர்த்தாரணே ஷஷ்டி. தேவதைகளுக்குள்ளே கீழ்ப்பட்ட தேவதை அக்நி. 'இதற்கு மேற்பட்ட தேவதை இல்லை' யென்னும்படியான பரமதேவதை ஸ்ரீ மஹாவிஷ்ணு. இப்படிச் சொன்ன பாரம்யத்தை மேலே ஆருவது காண்டத்தில் இரண்டாம் ப்ரச்நத்தில் *தேஷாமஸுராணும் திஸ்ர: புர ஆஸந்* என்று தொடங்கிச் சொல்லுமுபாக்கியானம் நிலைநாட்டுகின்றது. *தேஷாமஸுராணும் திஸ்ர: பர ஆஸந்* இத்யாதி. அஸுரர்களுக்கு மூன்று பட்டணங்களிருந்தன; ஒன்று இரும்பு மயமானது; மற்றொன்று வெள்ளி மயமானது; இன்னொன்று பொன் மயமானது. [அந்தப் பட்டணங்களைக்கொண்டு அவ்வசுரர்கள் தேவர்களுக்கு ஹிம்ஸையை விளைத்துக்கொண்டிருந்தார்கள்.] தேவர்கள் வெற்றிபெற முடியாதவர்களா யிருந்தனர்; பிறகு ஓருபாயம் செய்து வெல்லத் தொடங்கினர். *தே இஷும் ஸமஸ்குர்வத—அவர்கள் அம்பை ஸித்தப்படுத்தினர். அந்த அம்புக்கு எப்படி மிடுக்கு உண்டாயிற்றென்ன,



ஸ்ரீமதுபயவே. ஸ்ரீபாஞ்சராத்ரம் வரதராஜ பட்டர் ஸ்வாமியும், அவருடைய அத்வி தீய புத்ரரத்னம் ஆயுஷ்மான் ராஜமும்.

[விஷ்ணும் தேஜநப்] திருமங்கையாழ்வார் பெரிய திருமொழியில் (6—1—3) *குழல் நிறவண்ண! நின் கூறுகொண்ட தழல் நிற வண்ணன் நண்ணூர் நகரம்விழ, நணிமலை சிலை வளைவு செய்து அங்கு அழல்நிற அம்பது வானவனே! என்றருளிச் செய்திருப் பது கொண்டு (விஷ்ணும் தேஜநம்) என்ப தற்குப் பொருள் காணவேணும். திருவாய் மொழியில் (3—10—4ல்) பாணஸுரபங்க கதையை யருளிச் செய்யுமிடத்து அந்தப் போரில் சிவபிரானும் தலையிட்டானென் பதைச் சொல்லுகின்ற ஆழ்வார்* திரிபுரம் செற்றவனும்* என்கிற சொல்லால் சிவபிரானைக் குறித்தனர். அங்கு நம்பிள்ளை யீடு- "த்ரிபுரதஹந ஸமயத்திலே வில்லுக்கு மிடுக்காயும், நாணிக்குத் திண்மையாயும், அம்புக்குக் கூர்மையாயும், தனக்கு அந்தராத்மாவாயும் எதிரிசளைத் தலைசாயும்படி பண்ணி த்ரிபுரத்தை யழித்துக்கொடுத்தா னெம்பெருமான்; அத்தை யறியாத அஜ்ஞரானவர்கள் இத்தை அவன் தலையிலேவைத்துக் கவிபாட; இத்தைத் தானுங் கேட்டு மெய்யிறே யென்று மயங்கி 'அதுசெய்க நமக்கு இவனை வெல்லக்கட்டெண்?' என்று வந்து எதிரிட்டானாயிற்று." என்று. இது நிற்க. மேலேயெடுத்த "தேஷாம ஸுராணும்" இத்யாதி வேதோக்த கதையின் முடிவுகாணவேணும். [தே அப்ருவந் க இமாமஸிஷ்யதீதி] அம்பு ஸித்தமாய் விட்டது ஸரி. இதையெடுத்து எய்யவல்ல வன் யாவன்? என்கிறகேள்வி பிறந்தது. (ருத்ர இத்யப்ருவந்) அப்போது ருத்ரனைக் குறிப்பிட்டார்கள். அவனைக் குறிப்பிட்டதற்குக் காரணம் சொல்லுகிறது உடனே (ருத்ரோ வை க்ரூர:, ஸோஸ்யது இதி) ருத்ரன் தான் கொடியவன், அவன் எய்யட்டு மென்றார்களாம்; உடனே ருத்ரனை நோக்கி எய்யச் சொன்னபோது (ஸோப்ரவீத் வரம் வ்ருணை, அஹமேவ பசூநாம் அதிபதிரஸாநீதி) நான் பசுபதியாயிருக்கும்படி வரங் கொடுத்தால் எய்கிறேனென்றானும் ருத்ரன். அப்படியே வரங்கொடுத்தபின்பு எய்தானென்று மேலே சொல்லிற்று. ருத்ரன் பரதேவதையா யிருந்தால் வரம் வேண்டுவனா? என்பதை ஆராயவேணும்.

**69:** (பிராமணனைப்பற்றி இரண்டு விஷயங்கள்) ஆறுவதுகாண்டம் மூன்றுவது ப்ரச்நத்தில் *பசுமாலப்ய புரோடாச மென்கிற அநுவாகத்தில் (ஜாயமாநோ வை ப்ராஹ்மணஸ் த்ரிபி: ருணவா ஜாயதே) பிராமணன் பிறக்கும்போது மூவர்க்குக் கடன் பட்டவனாய்ப் பிறக்கிறான், அம்மூவர் ரிஷிகளும் தேவர்களும் பித்ருக்களு மாவர். வேதாத்யயனம் பண்ணி ரிஷிகளின் கடனைத் தீர்க்கக் கடவன். தேவபூஜை பண்ணி தேவர்களின் கடனைத் தீர்க்கக் கடவன். ப்ரஜோத்பாதநம் பண்ணிப்



ஸ்ரீமதுபயவே. பெருங்கட்டூர் ஸுதர்சந தாதாசாரியர் ஸ்வாமி. ஸ்ரீகாஞ்சீ. தேவப் பெருமாள் வேதகோஷ்டீ ப்ரவர்த்தகர்.

---

பித்ருக்களின் கடனைத் தீர்க்கக் கடவன். எனவே, வேதமோதி தேவதாராதனம் பண்ணி ஸந்தான ஸம்பந்நனாயிருப்பவன் யாவனோ அவனே ருடன்கள் தீர்ந்தவன் என்றதாயிற்று (மற்றொரு விஷயம் கேளீர்)

**70** ☆யஜ்ஞஸ்ய சிரோச்சித்யத☆ என்று தொடங்கி ஒருபாக்கியானம் ஓதப்பட்டுள்ளது. (அதாவது) யஜ்ஞ தேவதையின தலை அறுபட்டது. அப்போது தேவதைகள் அச்வினி தேவர்களை நோக்கி, 'நீங்கள் மருத்துவர்களல்லவா? இந்த அறுபட்ட தலையை மறுபடியும் சேரப் பண்ணுங்கள்' என்றார்கள். அவர்கள் ஒரு வரங் கேட்டுப் பெற்றுக்கொண்டு அப்படியே தலையை ஒட்டவைத்தார்கள். பிறகு தேவர்கள் சொன்னார்கள்—இந்த வைத்யர்கள் அசுத்தர்கள்; ஆகவே பிராமணன் வைத்யம் செய்யக் கூடாது; ஏனென்றால் ☆அபூதோ ஹி ஏஷ: அமேத்ய: யோ பிஷக்☆ வைத்யனென்பவன் மிகவும் அபரிசுத்தன்......முடிவாகச் சொல்லியிருப்பதாவது ☆உதபாத்ரமுபநிதாய ப்ராஹ்மணம் தக்ஷிணதோ நிஷாத்ய பேஷஜம் குர்யாத்☆ உதக பாத்திரத்தை அருகே வைத்து ஒரு ப்ராஹ்மணனைத் தென்புறமாக உட்காரவைத்துப் பிராமணன் வைத்யம் செய்வது என்று.

**71**. எனது பன்னிரண்டு பிராயத்திற்கு முன்னே நான் காஞ்சீபுரியில் ஆங்கிலப் பள்ளிக்கூடம் ஓரிடத்திலுங் கண்டதில்லை. அந்நாளில் ஸம்ஸ்க்ருத பாடசாலைகளில் முதன்முதலாகப் பாடம் வாசிக்கும் புத்தகம் எதுவென்றால், **ஶப்த மஞ்ஜரி** என்பதே. அது மூன்று பகுதியாயிருக்கும். முதற்பகுதியில் ஶப்த ரூபங்களெல்லாம் வாசித்தாய்விடும், இரண்டாவது பகுதி **தீங்ந்தமஞ்ஜரி** யென்பது. அதில் தாது பாடமெல்லாம் வாசித்தாய்விடும். மூன்றுவது பகுதியில் ஸ்ரீராமாயண ஸங்க்ரஹம் என்றொரு சிறு புத்தகமிருந்தது. அது பத்யமும் கத்யமும் கலந்த வெகு ஸரளமான நூல். அதை நிபுணரானவொரு உபாத்யாயரிடத்தில் வாசித்தால் அதிலேயே பெரும்பாலும் ஸம்ஸ்க்ருதபாஷாவ்யுத்பத்தி உண்டாகிவிடும். இக் காலத்தில் அந்தச் சிறுநூல் எங்குமே கேள்விப்படுவதில்லை. **ராமோதந்தம்** என்பதாகக் க்ரதில் விழுகிறது. இதுநிற்க. இந்த மூன்று வகுப்பு நூல்கள் ஒருவருஷத்துப் பாடமேயாகும். ஒன்றரை வருஷத்திற்கு மேற்படாது. இதன் பிறகு, ரகுவம்ஶம், மேகஸந்தேஶம், குமாரஸம்பவம். கிராதார்ஜுநீயம், சிசுபாலவதம், நைஷதீயம், காதம்பரீ. போஜசம்பூ, பாரதசம்பூ..........என்றிப்படிவாசித்துக்கொண்டுபோனால் ஸம்ஸ்க்ருதபாஷையில் ஆழ்ந்தஞான முண்டாகும். ☆அப்திர் லங்கித ஏவ வாநர



ஸ்ரீமதுபயவே. R. V. சேஷாத்ரியா சாரியர் B A, B L., Advocate, Madras. இவருடைய ஸம்ஸ்க்ருத பாஷாபாண்டித்யத்தை மிகவு மநுபவித்திருக்கிறேன்.



ஸ்ரீமதுபயவே D. ராமஸ்வாமி ஐயங்கார். அட்வகேட் சென்னை. (பாதுகா ஸஹஸ்ரம் முதலிய நூல்களுக்கு ஆங்கில மொழிபெயர்ப்பு இயற்றினவர்.)

---

ஊடை: கிம் த்வஸ்ய ஶம்பீரதாம் ஆபாதாலநிமக்நபீவரதநுர் ஜாநாதி மந்தாசல:* என்கிற முராரி வசனம் அன்னவர்களைப்பற்றி நினைவுக்கு வரவேமாட்டாது. அந்த காலம் மீண்டும் வருமென்று தோன்றவில்லை. அடியேன் ஶப்தமஞ்ஜரிவாசித்துக் கொண்டிருந்தது ஆறேழுபிராயத்திலிருக்கும். நினைவுக்கு வருவதொன்றை விஜ்ஞாபிக்கிறேன் மனமகிழ்ச்சியினாலே. ஸ்ரீராமாயணஸங்க்ரஹமென்று சொன்னேனே, அதில் கிஷ்கிந்தாகாண்டத்தில் வாலிவதம சொன்னபிறகு ஒருசுலோகம்—*தாராவலீமுககண: தாரேயஸ் தரணேஸ் ஸுத:, பாத்ரு நேத்ரு பித்ரு ப்ராத்ரு து:க்கேந வ்யலபந் சிரம்* என்பது (இதன்பொருள்-) தாரையென்ன, வானரக்கூட்டமென்ன, தாரையின்மகனான அங்கதனென்ன, ஸூர்யபுத்ரனான ஸுக்ரீவனென்ன—இவர்கள் கணவன்இறந்த துக்கத்தினாலும், அரசனையிழந்த வருத்தத்தினாலும், தந்தைமறைந்த துயரத்தினாலும், தமையன்தொலைந்த சோகத்தினாலும் வெகுநேரம் அழுதார்கள் என்பதாம். இதைத் திருத்தகப்பனார் பாடஞ்சொல்லி முடித்தபின் 'வாலிமாண்டதற்கு ஸ்ரீராமரும் அழுதாரே, அதை ஏன் இங்கே சொல்லவில்லை? என்று கேட்டேன. 'ராமரும் அழுதாரென்று உனக்கு எப்படித்தெரியும? அழும்போது நீ பார்த்தாயா?' என்று கேட்டார். (இதைக் கேண்மின;) அக்காலத்தில் என்னுடைய மாதுலரான ஸ்ரீமத்ஷஷ்டிதிருவேங்கடாசார்ய ஸ்வாமி [மாதாமஹரான (ஜகத்ப்ரஸித்த)



ஸ்ரீமத்பரமஹம்ஸேத்யாதி. திருமலை திருப்பதி சின்ன ஜீயர்ஸ்வாமி ஆஸ்தான பட்டாபிஷிக்தரான ஸ்ரீமத் கோவிந்த ராமாநுஜ ஜீயர் ஸ்வாமி



ஸ்ரீமதுபயவே. K. R. ராஜகோபால ஐயங்கார் ஸ்வாமி( பட்டுராஜப்ஸ்வாமி) சேரங்குளம். ஸ்ரீராஜமன்னார் ஸன்னிதி தர்மகர்த்தா.

ஷஷ்டிஜீயர்ஸ்வாமியின் பூர்வாச்ரமதிருக்குமாரர்] தமது க்ருஹத்தில் நாடோறும் பிற்பகலில் ஸ்ரீராமாயணப்ரவசனம் செய்து கொண்டிருந்தார். கதைகேட்கவிருப் பத்தினால் நாலும் சென்று கேட்டுக்கொண்டிருப்பேன். அங்கு மாமா ¤ஸஞ்ஜாத பாஷ்ப: பரவீரஹந்தா ராமோ முஹூர்த்தம் விமநா பபூவ¤ என்கிற ஸ்ரீராமாயண ச்லோகத்தைப் பன்னிப்பன்னிச் சொல்லி அர்த்தம் சொல்லிக் கொண்டிருந்தார். அது கேட்டிருந்த இரண்டுமூன்றுநாளில் இந்த ஸ்ரீராமாயண ஸங்க்ரஹபாடம் நடந் திருக்கிறது. ஆகவே திருத்தகப்பனார் கேள்விக்கு உண்மையான பதிலைச் சொன் னேன். கதையை விடாமல் சென்று கேட்டுவா—என்று நியமித்தார்.

**72**. பகவத்கீதையில் (4–7.] ¤யதா யதா ஹி தர்மஸ்ய க்லாநிர் பவதி பாரத, அப்யுத்தாநமதர்மஸ்ய ததா ஆத்மாநம் ஸ்ருஜாம்யஹம்¤ என்கிற ச்லோகத்தில் "ததா ஆத்மாநம் ஸ்ருஜாம்யஹம்" என்ற விடத்தில் ரஸ்யமும் ரஹஸ்யமுமான ஒரு விசேஷார்த்தமுண்டு. மேலே ஏழாமத்யாயத்தில் "ஜ்ஞாநீ து ஆத்மைவ மே மதம்" (18) என்று கீதாசார்யன் தானே ஜ்ஞானியைத் தனக்கு ஆத்மாவாகச் சொல்லு கையாலே இங்கு "ஆத்மாநம் ஸ்ருஜாமி" என்றதற்கு ஞானிகளை அவதரிப்பிக்கி றேன் என்பதும் அந்தரங்கமான பொருளாகும். அதர்மம் தலையெடுத்து தர்மம்



ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்ய ஸார்வபௌமரா யெழுந்தருளி யிருக்கும் ஸ்ரீமத் அழகியசிங்கர் ஸ்ரீவேதாந்ததேசிக யதீந்திர மஹா தேசிகன்.

தலைமடிந்து நிற்குங் காலங்களில் பகவான் தானவந்து அவதரிப்பதிற்காட்டிலும் ஞானிகள் அவதரிப்பதில் ப்ரயோஜநாதிசயமுண்டு இராமாநுச நூற்றந்தாதியில் (41) *மண்மிசை யோனிகள் தோறும் பிறந்து. எங்கள் மாதவனே கண்ணுற நிற்கிலும் காணகில்லா வுலகோர்களெல்லாம் அண்ணலி ராமானுசன் வந்து தோன்றிய வப்பொழுதே நண்ணரு ஞானம் தலைக் கொண்டு நாரணற்காயினரே* என்றுள்ள பாசுரம் இங்குப் பொருத்தமாக அநுஸந்திக்கத்தகும்.

**73.** பகவத்கீதை நான்காமத்யாயத்திலேயே மேல் (34) "தத் வித்தி ப்ரணிபாதேந பரிப்ரச்நேந ஸேவயா, உபதேக்ஷ்யந்தி தே ஜ்ஞாநம் ஜ்ஞாநிநஸ் தத்வதர்சிந:" என்கிற ச்லோகத்தில் ஞானிகளின் உபதேசப் பெருமை நன்கு கூறப்பட்டிருக்கிறது. 'தத்வமாகிய நான் சொல்லுவதிற் காட்டிலும், தத்வமாகிய என்னை ஸாக்ஷாத்கரித்து தத்வதர்சிகளென்று பேர் பெற்ற ஞானிகள் உபதேசிப்பது மிகச் சிறந்திருக்கும், அவர்களை யடிபணிந்தும் பலகால் அநுவர்த்தித்துக் கேட்டுத் தெரிந்துகொள், என்று அந்த ச்லோகத்தில் சொல்லப்படுகிறது. அப்படி யுபதேசித்துத் திருத்திப் பணிகொள்ளவல்ல ஞானிகளை ஸமய விசேஷங்களில் நானே அவதரிக்கச் செய்கிறேன் என்கிறான். மேலே ஸேவைஸாதித்தருள்கிறார் ஜ்ஞாநிநாம் அக்ரேஸர:

**74.** பகவானுடைய அவதாரத்தைப் பற்றிச் சொல்ல ப்ராப்தமான இந்த ப்ரகரணத்தில் ஞானிகளின் அவதாரத்தைப்பற்றிச் சொல்வதற்கு என்ன ப்ரஸக்தி யென்று நினைக்கவேண்டா; *பீதகவாடைப் பிரானார் பிரம குருவாகிவந்து* என்கிற பெரியாழ்வார்திருமொழிப்படியும் "ஸாக்ஷாத் நாராயணோ தேவ: க்ருத்வா மர்த்யமயீம் தநும், மக்நாநுத்தரதே லோகாந் காருண்யாத் சாஸ்த்ரபாணிநா" என்கிற ப்ரமாணப்படியும் ஞானிகளின் அவதாரமும் பகவதவதார விசேஷமேயாகையாலே, *சேமம் குருகையோ செய்ய திருப்பாற்கடலோ? நாமம் பராங்குசமோ நாரணமோ? தாமம் துளவோ வகுளமோ தோளிரண்டோ நான்கு முளவோ பெருமானுனக்கு* என்று நம்மாழ்வாரை நோக்கி ஒருபரமபக்தர் பணித்த பாசுரமும் இங்கு அநுஸந்திக்கப் பொருந்தும்.

**75.** கீதையிலேயே அவதார ப்ரயோஜநம் சொல்லுகிற (4-8) "பரித்ராணாய ஸாதூநாம் விநாசாய ச துஷ்க்ருதாம், தர்மஸம்ஸ்தாபநார்த்தாய ஸம்பவாமி



ஸ்ரீமான் உவே. கிடாம்பி. வரதாசாரியர். (வரத குட்டியென வழங்குபவர்) பெருமாள் கோயி லில் பிறந்து திருப்பதியில் வாழும் பண்டிதர்.

---

யுகே யுகே.'' என்கிறச்லோகத்தில் சில விசேஷங்கள் கேளீர் *துயரில் மலியும் மனிசர் பிறவியில் தோன்றிக் கண்காண வந்து* என்றும் *நாட்டில் பிறந்து படாதன பட்டு மனிசர்க்காய்* என்றும் சொல்லுகிறபடியே கர்மவச்யர்களான ஸம்ஸாரிகளும் படாத கஷ்டங்களைப் பட்டு இந்நிலவுலகில் எம்பெருமான் வந்து அவதரிக்க வேணுமோ? ஸத்யஸங்கல்பனை தான் தன்னுடைய ஸங்கல்பசக்தியைக் கொண்டே எதுவும் செய்யலாமன்றோ? எத்தனை ஸாதுக்களை ரக்ஷிக்க வேணுமாலும் எத்தனை துஷ்டர்களை சிக்ஷிக்கவேணுமானாலும் தன்னுடைய அவ்யாஹத சக்திகமான ஸங்கல்பத்தினாலே செய்து தலைக்கட்ட என்னதடை? ஸாது பரித்ரணத்திற்காகவும் துஷ்க்ருத் விநாசத்திற்காகவும் தர்மஸ்தாபனத்திற்காகவும் அவ்வப்போதுகளில் நானேவந்து பிறக்கிறேனென்கிறானே, எதற்காகப் பிறக்க வேணும்? என்று பிரபலமான ஆக்ஷேபம்தோன்றக்கூடியதிங்கு இதற்கு சங்கரபாஷ்யத்தில் யாதொரு பரிஹாரமும் கிடையாது. மத்வபாஷ்யத்தில் மூலத்திற்கு ஸம்பந்தமின்றிக்கே ஏதோ எழுதப்பட்டுள்ளது. அதாவது, ''ந ஜந்மநைவ பரித்ராணாதி கார்யமிதி நியம:; ததாபி லீலயா ஸ்வபாவேந ச யதேஷ்டசாரீ...லோகவத்து லீலா கைவல்யம்...'' என்று எழுதப்பட்டிருக்கின்றது. 'பகவான் ஸாதுபரித்ராணாதிகளை அவதரித்தே செய்தாகவேணுமென்கிற நிர்ப்பந்தமில்லை; ஆனாலும் விளையாட்டாக அவதரிக்கிறான். ப்ரஹ்ம ஸூத்ரத்திலும் *லோகவத்து லீலாகைவல்யம்* என்று சொல்லப்பட்டிருக்கிறதன்றோ, என்பது மத்வபாஷ்ய பங்க்தியின் பொருள். ஸாதுபரித்ராணாதிகளுக்சாக நான்வந்து பிறக்கிறேனென்று மூலத்தில் ஸ்பஷ்டமாகச் சொல்லியிருக்க, அதற்குக் கண்டனம் செய்கிற முறையில் இந்த பாஷ்யம் அவதரித்திருக்கின்றது. ☼லோகவத்து லீலாகைவல்யம்☼ என்று சொல்லப்பட்டிருக்கிறதன்றோ' என்பது மத்வபாஷ்ய பங்க்தியின் பொருள். ஸாதுபரித்ராணாதிகளுக்காக நான் வந்து பிறக்கிறேனென்று மூலத்தில் ஸ்பஷ்டமாகச் சொல்லியிருக்க, அதற்குக் கண்டனம் செய்கிற முறையில் இந்த பாஷ்யம் அவதரித்திருக்கின்றது. *லோகவத் து லீலாகைவல்யம்☼ என்கிற ப்ரஹ்ம ஸூத்ரமானது பகவான் செய்கிற ஜகத்ஸ்ருஷ்டியைப்பற்றினதே யொழிய பகவதவதாரத்தைப்பற்றியதன்று—என்பது நிர்விவாதம். அதை இங்கெடுத்தெதியது ஸுதராம் அப்ரஸக்தம்.

**76**. நம் ஸ்வாமியின் பாஷ்யத்திலுள்ள இன்சுவைப் பொருள்களை யநுபவிப்போம். அந்தரதிகரண ஸ்ரீபாஷ்யத்தில் ''அந்தஸ் தத்தர்மோபதேசாத்.'' (1-1-21)



சென்னை அட்வகேட்
ஸ்ரீமத பயவே. P. B அனந்தா
சாரியர்ஸ்வாமிக்கு எழுபத்தைந்தா
வது பிராயப்பூர்த்தியில்
பொன்னாடை போர்த்துமவஸரம்.

என்கிற ஸூத்ரத்தின் பாஷ்யத்தில் 'பரித்ராணாய ஸாதூநாம' என்கிற இந்த ச்லோகத்தை ப்ரஸக்தாநு ப்ரஸக்தமாக வுதாஹரித்து "ஸாதவோ ஹி உபாஸகா:; தத்பரித்ராண மேவ உத்தேச்யம், ஆநுஷங்கிகஸ்து துஷ்க்ருதாம் விநாச:, ஸங்கல்பமாத்ரேணாபி ததுபபத்தே:" என்றருளிச் செய்யப்பட்டிருக்கின்றது, ஸாதுபரித்ராணத்திற்காகவே முக்கியமாக அவதாரம் செய்தருளிற்றென்றும், துஷ்டநிரஸநமானது ஸங்கல்பத்தாலுங்கூட ஸாத்யமாகக் கூடியதாதலால் அவதாரத்திற்கு அது ப்ரதாநோத்தேச்யமன்று என்றும் மேலெடுத்த ஸ்ரீபாஷ்ய ஸ்ரீஸூக்தியினால் தெரிவிக்கப்படுகிறது. ஸாதுபரித்ராணம்மட்டும் ஏன் ஸங்கல்பத்தினாலாகக்கூடாது? "ஸாதவ: பரித்ராதா பவந்து" என்று ஸங்கல்பித்தால் ஆகமாட்டாதோ? என்று ஆக்ஷேபமுதிக்கக்கூடும். இதற்குப் பரிஹாரம் கீதா பாஷ்யத்தில் நன்கு உள்ளது. அதை விவரிக்கிறேன்.

**77.** 'ஸாதூநாம் பரித்ராணாய' என்றதில் ஸாதுக்களாவார் இன்னாரென்பதை விவரிக்கிற முகத்தால் அவர்களுடைய பரித்ராணம் ஸங்கல்பஸாத்யமாகாதென்றும் கண்காண வந்து தோன்றியே செய்யத்தக்கதாமென்றும் தெளிவித்தருளுகிறார் ஸ்வாமி. "ஸாதவ: — உக்தலக்ஷணதர்மசீலா: வைஷ்ணவாக்ரேஸரா: மத்ஸமாச்ரயணே ப்ரவ்ருத்தா: மந்நாமகர்மஸ்வரூபாணாம் வாங்மநஸாகோசரதயா மத்தர்சநாத் விநா ஸ்வாத்மதாரணபோஷணாதிக மலபமாநா: க்ஷணமாத்ரகாலம் கல்பஸஹஸ்ரம் மந்வாநா: ப்ரசிதிலஸர்வகாத்ரா பவேயுரிதி மத்ஸ்வரூபசேஷ்டிதாவலோகநாலாபாதிதாநேந தேஷாம் பரித்ராணாய" என்பன ஸ்ரீ கீதாபாஷ்ய ஸ்ரீஸூக்திகள். இப்பங்க்திகளின் காம்பீர்யம் வாசாமகோசரம். ஸ்ரீவைஷ்ணவாக்ரேஸரர்களான நம்மாழ்வார் போன்ற பரம பக்தர்களையே திருவுள்ளத்திற் கொண்டு இப்பங்க்திகள் அருளிச் செய்யப்பட்டிருக்கின்றன. *எங்கே காண்கேன் ஈன்துழாயம்மான் தன்னை யானென்றென்று* என்றும் *காணவாராயென்றென்று கண்ணும் வாயும் துவர்ந்து* என்றும் *கூராராழி வெண்சங்கேந்திக் கொடியேன் பால் வாராயொருநாள்* என்றும் 'தாமரைநீள் வாசத்தடம்போல் வருவானே! ஒருநாள் காணவாராயே* என்றும் கதறுகின்றவர்களாய் *ஒரு பகலாயிர மூழியாலோ* என்றும் *தெய்வங்காளென் செய்கேன் ஓரிரவு ஏழூழியாய்* என்றும் *ஊழியில் பெரிதால் நாழிகையென்னும்* என்றும் ஒருநொடிப் பொழுதை கல்ப



ஸ்ரீமான் உவே. K. V. (குன்றபாக்கம் விஞ்சிமூர்) ஸ்ரீநிவாஸாசாரியர். திருவல்லிக்கேணி (வைசாகோத்ஸவ ததீயாராதன கோஷ்டி நிர்வாஹகர்).

ஸஹஸ்ரமாக நினைப்பவர்களாய், "காலுமெழா கண்ணநீரும் நில்லா உடல் சோர்ந்து நடுங்கிக் குரல் பேலுமெழா மயிர் கூச்சுமறா" என்றும், "காலாழும் நெஞ்சழியும் கண்சுழலும்" என்றும் 'உள்ளெலா முருகிக்குரல்தழுத்தொழிந்தேன் உடம்பெலாம் கண்ணநீர்சோர' என்றும் ஸர்வாவயவ ஶைதில்யமுடையவர்களாயிருப்பவர்கள் ஆழ்வார்களைத் தவிர்த்து வேறுயாருமிலரே அவர்களின் ஸ்ரீஸூக்திகளையேயன்றே ஸ்வாமி ஸம்ஸ்க்ருதத்தில் மொழிபெயர்த்திருக்கிறார். அவர்கள் தன்னைக் காணவேணுமென்றும் தன்னோடு பேசவேணுமென்றும் தன்னைத் தழுவவேணுமென்றும் காதலித்தால் எம்பெருமான் நேராக வந்தாலொழிய அவர்களின் காதல் நிறைவேறுதன்றே. ஸங்கல்பம் இங்கு என்ன பண்ணக்கூடும்? "மழுங்காத வைந்நுதிய சக்கர நல் வலத்தையாய் தொழுங்காதல் களிறளிப்பான் புள்ளூர்ந்து தோன்றினையே, மழுங்காத ஞானமே படையாக மலருலகில், தொழும்பாயார்க்களித்தால் உன்சுடர்ச்சோதி மறையாதே" (3-1-9) என்ற திருவாய்மொழிப் பாசுரத்தையே ஸ்வாமி நிதியாகக் கொண்டு பாஷ்யம் செய்தருளியிருக்கிறார்.

**78**. ஆக 'பரித்ராணாய ஸாதூநாம்' என்றவிடத்தில் ஸாது சப்த விவக்ஷிதர்கள் ஆழ்வார்கள் போன்றவர்களென்றும், அவர்கள் எம்பெருமானை நேரில் கண்டாலல்லது தீராத காதலையுடையவர்களாகையாலே அவர்களுக்காக வந்து தோன்றியேயாகவேணுமென்றும், அவர்களுடைய காதல் ஸங்கல்பத்தினால் ஒருகாலும் தீர்க்கமுடியாதென்றும்காட்டி சங்காபரிஹாரம் நன்குசெய்தருளினாராயிற்று.

**79**. ராமாவதாரமோ கிருஷ்ணவதாரமோ செய்தருளியிருக்குங்காலத்தில் ஸாதுக்களை ஸம்ரக்ஷித்திருப்பதுண்டே, அதுமட்டும் (பரித்ராணாய ஸாதூநாம்) என்பதனால் விவக்ஷிதமன்று; பிற்காலத்தில் ஆழ்வாராசாரியர்கள் குணாநுபவங்கள் செய்து வாழ்ந்திருக்கிறார்களே, இதுவும் ஸாதுபரித்ராணமேயாம். எம்பெருமான் அவதாரங்கள் செய்து பலபல சேஷ்டிதங்களையும், திருக்கல்யாண குணங்களையும் காட்டியருளாதிருந்தால் பக்த பாகவதோத்தமர்கள் எதுகொண்டு வாழமுடியும்? முடியாது. ஆகவே அவதாரஸமகாலத்திலுள்ளாரோடுபின்புள்ள அஸ்மதாதிகளோடு வாசிபறச் செய்து போரும் பரித்ராணம் அவதாரப்ரயோஜனமென்றுணர்க.

ஸ்ரீமான் உ. வே. திருமலை அனந்தாண்பிள்ளை
குன்றாக்கம் கோபாலாசாரியர், ஸாஹித்ய
வ்யாகரண வித்வான்.



ஸ்ரீமான் உ. வே. திருமலை அனந்தாண்பிள்ளை
குன்றாக்கம் திருவேங்கடாசாரியர்,
ஸ்ரீபாஷ்ய வேதாந்த ஆகமஜ்யோதிஷ வித்வான்.

☆☆ஸந்தோஷ ஸூசனம். இங்கு விளங்குமிருவர் ஸஹோதரர்கள்: முதலில் நிற்பவர் இளையவர்; இடதுபுறம் நிற்பவர் மூத்தவர். இருவரும் சிறுமாமனிச ரென்னத்தக்கவர்கள். ஒரு ஸபவத்ஸர காலத்திற்கு மேலாக நான் மூன்று வியாக்கியானங்களோடு பதிப்பித்துவரும் பகவத் விஷயத்திற்கு அச்சுத்தாள் திருத்தும் பணியில் இவ்விருவரும் சேர்ந்து செய்துவரும் பேருதவி கைம்மாறற்றது. என்னோடு நெருங்கின குடல் துடக்குடைய விவர்களை ' நீர்மலிவையத்து நீடுநிற்பார்களே ' என்று ஆசீர்வதிக்கிறேன். ப்ரஸ்துதமான பகவத்விஷயப் பதிப்பு பெரும்பாலும் முற்றுப்பெற்றதேயாம். திருவல்லிக்கேணி ஸ்ரீமான் M. A. வெங்கடகிருஷ்ணனும் இவ்வுதவியிற் சேர்ந்தவன்.

**80.** திருவாய்மொழியில் (1-8-8) ஆனானையன் மீனோடேனமும், தானானா னென்னில் தானாய சங்கே" என்கிறபாசுரத்தினால் இவ்வர்த்தவிசேஷத்தைத் தாமே ஸ்வாநுஸந்தானமுகத்தாலே ஆழ்வார் காட்டியருளினார்; இப்பாசுரத்தின் ஆறாயிரப் படி யருளிச்செயல் வருமாறு—"(ஆனான்) தன்னுடைய திவ்யசேஷ்டிதமாத்ரமேயோ எனக்கு போக்யமாகச் செய்தருளிற்று? தன்னுடைய திவ்யாவதாரங்களுமெல்லாம் என்பக்கலுள்ள ஸங்கத்தாலே எனக்கு போக்யமாகச் செய்தருளினானென்கிறார்" என்பதாம். இது (பரித்ராணாய ஸாதூநாம்) என்பதன விவரணமேயாகும்.

**81.** (தமிழாராய்ச்சி யொன்று) திருவாய்மொழிக்கு அவதரித்துள்ள ஐந்து வியாக்கியானங்களுள், வடக்குத்திருவீதிப்பிள்ளை பட்டோலைகொண்டருளின ஈடு முப்பத்தாறாயிரப்படியே பகவத்விஷய காலக்ஷேபக்ரந்தமாக நிகழ்ந்துவருகிறதென் பதை ஸ்ரீவைஷ்ணவர்களனைவருமறிவர். இதற்கு அரும்பதவுரைகள் இரண்டு அவத ரித்துள்ளன. அடையவளைந்தானரும்பதவுரை முதலது. அதன்ஸங்க்ரஹமாகத்தோன்றி யது ஜீயரரும்பதவுரை. ஜீயர்என்றது- குணக்கரம்பாக்கம் ஜீயர்என்றபடி. இவ்வரும்



ஸ்ரீமான் உபயவே. தமிழ்வித்துவான். S. V. வரதராஜய்யங்கார் ஸ்வாமி. திருவல்லிக்கேணி

பதவுரைகளிரண்டையும் துணைகொண்டே ஈடு காலக்ஷேபம் நிர்வஹிக்க இயலும். ஆகவே இவ்வரும்பதவுரைகள் மிகவும் உபகாரகங்களென்றே சொல்லவேணும் ஆனாலும் இவற்றில் திருத்த வேண்டிய இடங்கள் சில பலவுள்ளன வென்பது பெரியார்களின் கொள்கை. இதை அடியேனுடைய திவ்யார்த்ததீபிகையுரையில் ஆங்காங்கு விளக்கியுமிருக்கிறேன். தமிழர்களுக்கு அரிய பெரிய விருந்தாக ஓரிடம் ப்ரஸ்தாவிக்கிறேனிங்கு. திருவாய்மொழியில் முதற்பத்தில முதல்தூதுபதிகமான *அஞ்சிறைய மடநாரையில் (பா. 4) *என்னீர்மைகண்டிரங்கி யென்பதில் ஒரு தமிழனுக்கும் பட்டர்க்கும் ஸம்வாதமாக ஒருவிஷயமுள்ளது. ஒருதமிழன் இப்பாசுரம் பிரிவுகாலத்தில் பேசப்படுவதாதலால் பராங்குசநாயகியின் நிலைமையைக் காதால் கேட்கமுடியுமேயல்லது கண்ணால் காணமுடியாதன்றோ; ஆகவே *என்னீர்மை கேட்டிரங்கி' என்றிருக்கவேணுமேயொழிய *கண்டிரங்கி* என்றிருக்கக்கூடாதே! என்று கேள்விகேட்டிருக்கிறான். அதற்கு பட்டர் குறுந்தொகையென்கிற சங்கநூலிலிருந்து (399) *ஊருண் கேணியுண்டுறைத் தொக்க பாசியற்றே பசலை; காதலர் தொடுவுழித்தொடுவுழி நீங்கி விடுவுழிவிடுவுழிப் பரத்தலானே* என்ற செய்யுளையும், "புல்லிக்கிடந்தேன் புடைபெயர்ந்தேன் அவ்வளவில், அள்ளிக்கொள்வற்றே பசப்பு* என்கிற திருக்குறளையும் எடுத்துக்காட்டி அற்புதமாக உபந்யஸித்தருளி அந்தத்தமிழனை வாய்மாளப் பண்ணியிருக்கின்றார். இதன் விளக்கத்தை அடியேனுடைய திவ்யார்த்த தீபிகையுரையில் காண்பது. இங்கு அடையவளைந்தானரும்பதவுரையில் மிக்க தடுமாற்றமுள்ளது. குறுந்தொகைச் செய்யுளைச் சங்கத்தார்குறள். என்றெழுதியும், (பரத்தலானே) என்பதைப் (பயத்தலானேன்) என்று பொருள்படாதபடிக்கு மாற்றியுமிருப்பது ஆராய்ந்து திருத்தத் தக்கது.

**82.** திவ்யப்ரபந்தங்களில் திவ்யதேசாநுபவம் பிரதானமாய் நிற்கிறது' அதில் ஆழ்வார்கள் பதின்மராலும் மங்களாசாஸனம் செய்யப்பெற்ற திருப்பதி தென்னாடும் வடநாடும் தொழநின்ற திருவரங்கமொன்றேயாம். அடுத்தபடியாகத் திருமலை ஒன்பதின்மரால் பாடப்பெற்ற தலமாகும். மற்றதிருப்பதிகளெல்லாம் ஒருவர் பாடல், இருவர்பாடல், மூவர்பாடல். நால்வர்பாடல், ஐவர்பாடல்...என்னும் முறையில் சேர்ந்தவையாம். ஓராழ்வார்மட்டும் பாடினதிருப்பதிகளைக் கீழே குறிப்பிடுகிறேன்.

திருமழிசைப்பிரானொருவரே பாடியவை இரண்டே; (சோழநாட்டில்)

*ஆற்றங்கரை கிடக்குங் கண்ணன் கவித்தலமும், அன்பிலும்.



உயர்திரு. A. அழகிரிசாமியவர்கள்,
(Retired Supreem Court Judge,
Madras



ஸ்ரீமதுபயவே. K. S. சம்பகேசய்யங்கார் ஸ்வாமி, Advocate,
Madras உபயவேதாந்த ரஸிகமணி.

நம்மாழ்வாரொருவரே பாடிய திருப்பதிகள்;—

(பாண்டிநாட்டில்)
திருக்குருகூர்
திருப்புளிங்குடி
வரகுணமங்கை
ஸ்ரீவைகுண்டம்
துலைவில்லிமங்கலம் (இரண்டு
திருக்கோளூர் திருப்பதிகள்.)
தென் திருப்பேரை
குளந்தை (பெருங்குளம்)
(ஆக நவதிருப்பதிகள்)
சிரீவரமங்கலநகர் (வானமாமலை)

(மலைநாட்டில்)
திருவனந்தபுரம்
திருவண்பரிசாரம்
திருவாட்டாறு
திருக்காட்கரை
திருச்சிற்றாறு
திருப்புலியூர்
திருவண்வண்டூர்
திருக்கடித்தானம்
திருவாறன்விளை

குலசேகராழ்வா ரொருவர் பாடியது (மலைநாட்டில்) திருவித்துவக்கோடு ஒன்றே
பெரியாழ்வாரொருவர் பாடியவை-(வடநாட்டில்) கண்டமென்னுங் கடிநகர்.
பாண்டிநாட்டில்—ஸ்ரீவில்லிபுத்தூர். (ஆண்டாளும்.)

திருமங்கையாழ்வாரொருவர் பாடிய திருப்பதிகள்—

(தொண்டைநாட்டில்)
பரமேச்சுர விண்ணகரம்
திருத்தண்கா (விளக்கொளி)
பவளவண்ணம்
நீரகம், காரகம்,
கார்வானம்



ஸ்ரீமான் உ. வே. ஸ்ரீநிவாஸய்யங்கார்,
Advocate, Madras.
(ஸ்ரீசம்பகேசய்யங்கார்ஸ்வாமி திருக்குமாரர்)



ஸ்ரீமான் உ. வே. T. ராமஸ்வாமி
ஐயங்கார், கைங்கர்ய துரந்தரர்,
திருவல்லிக்கேணி.

---

நிலாத்திங்கள் துண்டம்
திருக்கள்வனூர்.
திருப்புட்குழி.
திருநின்றவூர்.
திருவிடவெந்தை

(நடுநாட்டில்)

திருவயிந்திரபுரம்.

(சோழநாட்டில்)

காழிச்சீராமவிண்ணகரம்
திருநாங்கூர்த்திருப்பதிகள் ஒன்பது
திருவிந்தளூர்
திருவெள்ளியங்குடி
புள்ளம்பூதங்குடி.
(கூந்தல்கமழும்) கூடலூர்.
நந்திபுரவிண்ணகரம் (நாதன்கோவில்)
திருநறையூர் (நாச்சியார்கோயில்)
திருச்சேறை
திருவழுந்தூர்
சிறுபுலியூர்
திருக்கண்ணமங்கை.
திருக்கண்ணங்குடி
திருநாகை. (நாகைப்பட்டினம்.)
உறையூர்
தலைச்சங்கநாண்மதியம்
ஆதனூர்

(பாண்டிநாட்டில்)

திருப்புல்லாணி
திருமெய்யம்
திருக்கூடல் (தென்மதுரை)

(வடநாட்டில்)

திருப்பிரிதி
நைமிசாரணியம்
சிங்கவேழ்குன்றம்.

ஆண்டாளொருத்தி பாடியது
விருந்தாவனம்.



V. C. RANGADURAI. B.A., B.L.,
F.C.M.A., F.I.C.W.A., C.A.I.I.B., A.C.I.S., F.R.E.S., A.C.S.,
s/o (Late) High Court Judge V. Bashyam Iyengar.



ஸ்ரீமான் உ. வே.
S. V. நரஸிம்ஹாசாரியர்,
'சதுர்ப்பாஷாவிசாரதர்' மதுரை.

**83.** [இதுவும் ஒரு அபூர்வ விருந்து கொண்மின்] திவ்யப்ரபந்தங்களில் பலபல கதைகள் அநுஸந்திக்கப்பட்டுள்ளன. அவற்றில் பதின்மரும் அநுஸந்தித்த கதைகள் ஸ்ரீராம—ஸ்ரீ க்ருஷ்ணவதாரங்களில்...ஒரொருவர் அநுஸந்தித்த அபூர்வமான கதைகளை எடுத்துக்காட்டுகின்றேன். இன்ன ஆழ்வார் இன்ன பாசுரத்தில்—என்று மட்டும் காட்டி நிற்கிறேன். அவற்றின் விவரணங்கள் — அடியேனுடைய திவ்ய ப்ரபந்த திவ்யார்த்த தீபிகையிலும், (தனிப்படவெழுதி வெளியிட்டுள்ள திவ்ய ப்ரபந்த பகவத்கதாம்ருதமென்னும் நூலிலும் எளிதாகக் காணத்தக்கன.

**பொய்கையாழ்வார்** :— முதலாழ்வார்கட்குத் திருக்கோவலிடைகழியில் காட்சி தந்தது=முதல் திருவந்தாதியில் 'நீயுந் திருமகளும் நின்றாயால்' என்ற பாசுரத்தில்.

**திருமழிசைப்பிரான்**—✡கண்டுவணங்கினார்க்கென்னுங்கொல்✡ (4-திருவந்தாதி பா. 78)
✡ஈசனைவென்ற சிலையைப்பரசுராமனிடத்தில் நின்றும்வாங்கிக்கொண்டது-8,
✡மதிகோள் விடுத்தது (12).

**நம்மாழ்வார்**—✡சூட்டுநன்மாலைகள்✡ திருவிருத்தம் 21.
✡எரிகொள் செஞ்ஞாயிறு *மந்தேஹர் மடிவது. திருவிரு. 82.
*கூனேசிதையவுண்டைவில்* (ராமாவதாரத்தில்)திருவாய். 1-5-5.
*தீர்த்தனுலகளந்த*...✡ திருவாய்மொழி 2—8—6.

**குலசேகர ஆழ்வார்**—ஸ்ரீராமாயண கதாஸாரம்—பெருமாள் திருமொழியின் கடைசி பதிகத்தில் அநுசந்திக்கப்பட்டுள்ளது. இதில் உத்தர ஸ்ரீ ராமாயண கதை இவரொருவரால் மட்டும் அநுஸந்திக்கப்பட்டது.



ஸ்ரீமான் M. பத்மநாபையங்கார், சென்னை திருமலை திருப்பதி தேவஸ்தான மிராசுதாரர் (late) ஜட்ஜ் கிருஷ்ணமாசாரியர் திருக்குமாரர்.

---

பெரியாழ்வார்—சீராவிசுளைச் சக்கரத்தால் துணித்தது (2-7-8).

மல்லிகை மாபாலை கொண்டு ஆர்த்தது. (3-10-2). பாண்டிய நாடனமேருமலைமுடியில் மகரகேது நாட்டியது* (5—4—7) மலயத்வஜராஜன் திருமாலிருஞ்சோலையில் மண்டியது (4-2-7). அர்ஜுனனது தேர்க்குதிரைகளின் விடாயை மோழை எழுவித்துத் தீர்த்தது (4—2—7). *கழல் மன்னர் சூழவிருந்து மீண்டெழலுற்றது (1-8-5) * ஆமையாய் கங்கையாய் (4-9-5) முதலியவை.

ஆண்டாள்—பக்த விலோசனத்து அடிசிலுண்டது.

தொண்டரடிப்பொடியாழ்வார்—க்ஷத்ரபந்து பரகதிகண்டது. (திருமாலை-4)

*நமனும் முற்கலனும்பேசினது (12)

அணைகட்டுகையில் அணில்களின் தொண்டு (27).

திருமங்கையாழ்வார் — துரியோதனன் பொய்யாஸனமிட்டபோது, கண்ணபிரான் விச்வரூபமெடுத்து மல்லரை முடித்தது. (9-1-8). கோவிந்தஸ்வாமிக்குக் கருத்தறிந்து காரியஞ் செய்தது. (5-8-5). உரோமசனுல் நான்முகனது செருக்கை நீக்கினது. (பா. 3-4-2). தொண்டைமன்னனுக்கு அருள்செய்தது (பா. 5-8-9). சிவபிரான் திரிபுரமெரித்ததும் அப்போது திருமால் நிர்வாஹகராய் அமைந்ததும். (பா. 6-1-3). சிவபிரான் தக்கன் வேள்வி தகர்த்தது. (பா. 6-1-3). வாஸவதத்தை தளைக்காலன் பின்சென்றது. (சிறிய திருமடல்). வேகவதியென்பாள் தன் கணவனுடன் சேர்ந்தது. (பெரிய திருமடல்.) பன்னுகராயன் மடப்பாவை பார்த்தனைப் புணர்ந்தது. (பெரிய திருமடல்.) உஷை அநிருத்தனைப் புணர்ந்தது. (பெரிய திருமடல்) பார்வதி பரமசிவனைத் தவஞ்செய்து பெற்றது. (பெரிய திருமடல்)



ஸ்ரீசதாபிஷேகஸ்வாமிக்கு இருபுறமும் ஸ்ரீமான் திருநகரி மேலைத் திருமாளிகை சடகோபாசாரியரும் மே. திருவேங்கடாசார்யரும்.

**84**. ஒருவிஷயம் விஜ்ஞாபிக்கிறேன். அதை ஆத்மப்ரசம்ஸையாகக் கொள்ளாமல் ஸந்தோஷஸீமோக்தியாகக் கொள்ளவேணும். வேதவேதாந்தவர்த்திநீஎன்றொருஸபையின்சார்பாகத்திருவல்லிக்கேணியில்வருஷந்தோறும் ஸ்ரீபார்த்தஸாரதி ஸ்வாமிஸந்நிதியில் ஒருவிசேஷஸம்மேளனம் நடந்துவருகிறதல்லவா? இது நூறுவருஷங்களுக்கு மேலாக நடந்துவருகின்றது. ஆகியில், திருமழிசை, ஸ்ரீபெரும்பூதூர், காஞ்சீ, திருப்பதி, மைஸூர், திருநாராயணபுரம் முதலானவிடங்களிலிருந்து பரீக்ஷ்யர்களான வித்யார்த்திகளும், பரீக்ஷகர்களான வித்வான்களும் பலர் கூடுவர்கள். வித்வான்களின் வாக்யார்த்தங்களும் உபந்யாஸங்களும் விசேஷமாக நடைபெற்றுவரும் அப்போது அடியேன் பதினாறுவது பிராயம் முதலாகச் சில வாண்டுகள் இந்த ஸம்மேளனத்தில் பரீக்ஷ்யனாக விடைகொண்டிருந்தேன். பதினேழாவது பிராயத்தில் நாலாயிர திவ்யப்ரபந்தத்தை வியாக்கியானத்தோடுங் கூட ஸூர்க்கத்திபரீக்ஷை கொடுக்கிறேன் என்று நானாகவேசொல்லிக்கொண்டுசென்றேன், ஸூர்க்கத்தியைத் தீட்டி எதிரேவைத்துவிட்டுக் கேள்விகள்கேட்பது; மூலத்திலோ வியாக்கியானத்திலோ தவறுதலாகவிடைதந்தாலும் திசைதோறும் விழித்தாலும் அந்தஸூர்க்கத்தியினால் எனது நாக்கையறுத்திடுவது–என்று பிரதிஜ்ஞைசெய்து பரீக்ஷை கொடுத்தல். [ஆனாலும் பரீக்ஷகர்கள் ஸூர்க்கத்தியைக் கொணரவில்லை. தீட்டிவைக்கவுமில்லை.] இந்தப்ரதிஜ்ஞை அபூர்வமாயும் மிகக் கடினமாயுமிருக்கின்றதென்று விசேஷமான கூட்டம் கூடிவிட்டது. [இதுபற்றி அடியேன் பலதடவை எழுதியிருக்கிறேன்; பலபத்ரிகைகளிலும் பலர் எழுதியிருக்கிறார்கள். ஆதலால் ஈண்டு மிகச் சுருக்கமாக எழுதிமுடிக்கிறேன்] "ஸூர்க்கத்தியினால் நாக்கையறுப்பது" என்று பேச்சுவந்தபடியால் 'நாக்குஎன்கிற சொல் ஸரியா? நா என்கிறசொல் ஸரியா?" என்று முன்னம் ஒருபண்டிதர் வினவினார்; *அண்ணிக்கும் அமுதூறுமென்னாவுக்கே* என்றார் மதுரகவிகள். *நாக்குவழித்து நீராட்டும்" என்றும், *நாக்கு நின்னையல்லாலறியாது என்றுமருளினார் பெரியாழ்வார்; அவரே *நாவகாரியம் சொல்லிலாதவர்* என்றுமருளினார்; ஆகவே இரண்டு சொற்களும் ஸரியே என்றேன். அப்போது எனக்குமட்டும் மூன்றுவேளை பரீக்ஷை நடந்தது. சில பரீக்ஷைகளை மட்டும் எழுதுகிறேன், (1) சிறியவொரு பாசுரத்தில் கண்ணனுடைய பத்து சேஷ்டிதங்கள் சொல்லியிருக்கிறதே, அது என்ன பாசுரம்? (விடை) ❋அரவமடல் வேழம்



ஸ்ரீமான் உ. வே. R. ரங்கராஜ ஐயங்கார், M. A., (வேதாந்த ஸம்ப்ரதாய ஸாரஜ்ஞர், மதுரை.



ஆள்குருந்தம் புள்வாய், குரவை குடமுலை மற்குன்றம் — கரவின்றி, விட்டிறுத்து மேய்த்தொசித்துக் கீண்டுகோத்தாடி, உண்டட்டெடுத்த செங்கணவன் "என்றேன். (முதல்திருவந்தாதி.) (2. வினா) எம்பெருமானுடைய திருவடிகளுக்குக் கமலத்தை ஒப்பாகச் சொல்லியிருப்பது தெரியும்; கமலபாந்தவனை ஒப்புச்சொன்னவிடமுண்டா? (விடை) "சொல்லமாட்டேனடியேன் என்றேன். இதற்கு இரண்டு பொருள். என்னால் சொல்லமுடியாதென்பது மேலெழுந்த பொருள். திருவாய்மொழி 8-5-5 "சொல்லமாட்டேனடியேனென்கிறபாசுரத்தில் கபலபர்துனை ஒப்பாகச் சொல்லியுள்ளதென்பது வினாவுக்குத் தக்க விடை. இந்த வினா விடை நிகழும் போது ஸபையில் பெரிய அதிர்ச்சி ஏற்பட்டது. "சொல்லமாட்டேனென்று சொல்லித் தோற்றுப்போய்விட்டார், ஸ்வர்க்கத்திக்கு வேலை வந்துவிட்டது" என்றெண்ணிக் கை தட்டினவர்களும். சொல்லவேண்டிய பாசுரத்தினடியைச் சொல்லிவிட்டாரென்று உகந்து கரகோஷம் செய்தவர்களுமாயினர். (3) நாச்சியார் திருமொழியில் (1-9) "தொழுதுமுப்போது முன்னடி வணங்கியில் முன்னிரண்டடிகளை மட்டும் எழுதச்சொன்னார்கள். பெரும்பாலும் க்ஷீராப்தி யென்கிற பொருளும் அதற்குச் சேர பாற்கடல் என்று வல்லினறகரமுமாகையாலே அப்படி யெழுதிவிடுவேனென்று எண்ணம். இங்கே பார்சூழ்ந்த கடலென்று வியாக்கியானமாகையாலே பார்க்கடல் என்றெழுதினேன். (தொழுது. முப்போதும்......இத்யாதி பதங்களொன்றையு மெழுதாமல் (பார்க்கடல்) என்றுமட்டும் எழுதிக் காட்டினேன்...... இப்போது இவ்வளவு போதும். விரிவாக ஸ்ரீ ராமாநுஜன் 239ல் காண்க. ... *

**85** எம்பெருமானார் அவதார ஸம்வத்ஸரம். திருவனந்தாழ்வான் உலகையெல்லாம் உய்விப்பதற்காக எம்பெருமானாராகத் திருவவதரித்தருளினது பிங்கள



ஸ்ரீமதுபயவே. A. ஸ்ரீநிவாஸய்யங்கார், மிராசுதாரர்.
அக்ரஹார பாடசாலாத்யக்ஷர்.
வித்வத் ஸதஸ் ப்ரதிஷ்டாபகர்.
(மன்னார்குடி)

---

சித்திரையில் செய்ய திருவாதிரை நன்னாளென்பதை யாவருமறிவர். அந்த திவ்யாவதார ஸம்வத்ஸரமான பிங்கள வருஷம் இதோ நெருங்கிக்கொண்டிருக்கிறது. அற்றைக்கு ஸ்வாமி திருவவதரித்து 960 ஆண்டுகள் முடிகின்றன: ஆகையால் அந்நாளை விசேஷமாகக் கொண்டாடவேண்டியது எம்பெருமானார் தரிசனத்தைச் சார்ந்த நம் எல்லோருடையவும் கடமையாகும். திவ்ய தேசங்களில் ஆண்டுதோறும் திருநக்ஷத்திர உத்ஸவம் விசேஷமாகப் பரிபாலிக்கப்பட்டே வருகின்றது. ஸௌகரியக் குறைவினால் அப்படி பரிபாலிக்கப்படாமலிருக்குமிடங்களிலும் இனிமேல் திருவாதிரைதோறும் உத்ஸவம் கொண்டாட வழி வகுக்கவேணும். தவிர, ஒவ்வொரு கிராமத்திலும் நகரங்களின் ஒவ்வொரு பகுதியிலும் நாளது நளவருடத்தொடக்கத்திலிருந்தே ஸ்வாமி ஸாதித்தருளிய ஸ்ரீ பாஷ்யம் முதலிய திவ்யஸூக்திகளின் விசேஷ பாராயணம், வித்வான்களைக்கொண்டு அவற்றைப்பற்றிய ப்ரவசனங்கள், அவற்றின் பொருளை தேச பாஷைகளில் விவரிக்கும் பற்பல நூல்களைத் தகுந்தவர்களைக்கொண்டு எழுதுவித்து ப்ரசுரப்படுத்துதல், விரும்புமவர்களுக்கு ஸ்ரீபாஷ்யாதிகளை முறையாகக் கற்பிக்க வசதிசெய்தல், இப்படி இன்னமும் பலவிதமான நற்காரியங்கள் மூலம் எம்பெருமானார் ஸித்தாந்தத்தை விசேஷமாக எங்கும் பரப்பி, அதை திகந்த வ்யாபியாக்க ஆங்காங்கு எழுந்தருளியிருக்கும் பெரியார்கள் பெருமுயற்சி கொள்ளவேணுமென்று பணிவுடன்வேண்டிக்கொள்கிறேன்- யோக்யதை பெற்றவர்கள் நளவருடத்திலிருந்தே ஆரம்பித்து தினமும் பலர்கூடியோ, தனித்தனியாகவோ, முடிந்தால் ஸன்னிதிகளிலோ, தந்தாம் இடங்களிலோ ஸௌகரியப்படி எம்பெருமானார் ஸ்ரீஸூக்திகளையும் இராமாநுச நூற்றந்தாதி முதலியவற்றையும் தினமும் பாராயணம் செய்துவருவது மிகமுக்கியமாகும். அன்னவர்கள் தாங்கள் செய்துவரும் பாராயணவிவரங்களை எமக்குத் தெரிவித்தால் ஸ்ரீராமாநுஜனில் பிரசுரித்து ஆவனசெய்வோம்.

— எண்பத்தைந்து வார்த்தாமாலை முற்றிற்று —

## அன்பர்களுக்கு அறிவிப்பு

கடந்த விக்ருதிஞு பங்குனி விசாகத்தில் ஷஷ்டியப்த பூர்த்தி நடந்தது முதலாக வருஷந்தோறும் நாம் வெளியிட்டுவரும் மலர்களைக்காட்டிலும் இவ்வாண்டு வெளியிடப்படும் இம்மலர் நமது மனத்துக்கு மிக இனிதாக அமைந்தது. ஆங்காங்குள்ள அன்பர்களுடையவும் மஹான்களினுடையவும் திருவுருவப்படங்களை சேகரித்து வெளியிடவேணுமென்கிற ஆசை ஒருவாறு நிறைவேறியது. இன்னும் பலருடைய உருவப்படங்கள் வெளியிடவேண்டியுள்ளன. அவரவர்கள் தம் தம் உருவப்படங்களைத் தாமதித்து அனுப்பிவருவதனால் சிற்சில உருவப் படங்கள் ப்ளாக் செய்யப்படாமல் நின்றிருக்கின்றன. இன்னும் பலருடைய படங்கள் எதிர்பார்க்கப்பட்டுமிருக்கின்றன. மீண்டும் வேண்டுகிறோம் விரைவில் அனுப்பிவைக்கும்படி.

**முக்கியமானவொரு குறிப்பு;—** இந்த எண்பத்தைந்து வார்த்தாமாலையில் எண்பத்தைந்தாவது லக்கங்கொண்ட கடைசி வார்த்தையை ஒவ்வொருவரும் விசேஷித்துக் குறிக்கொள்ளவேணும். அதை யுத்தேசித்து நாம் மாதந்தோறும் **பிங்களவத்ஸர மங்களமாலிகை** என்னும் பெயரால் ஒரு வெளியீடு வெளியிட்டு வர விரும்பியிருக்கிறோம். அதில், மிச்சமுள்ள மஹான்களின் திருவுருவப்படங்களை வெளியிட்டுவருவோம். நம்மால் பிரார்த்திக்கப்படும் மஹான்கள் தம்தம் திருவுருவப்படங்களை ப்ளாக் செய்வித்தே அனுப்பவேணு மென்பது வேண்டுகோள். எம்பெருமானாரைப் பற்றி விஷயதானம் செய்யவிரும்புமவர்களும் தாராளமாகச் செய்யவேணும். இன்னும் நாற்பது வருடங்கள் கழித்து வரப்போகிற ஸஹஸ்ராப்தபூர்த்தி மஹோத்ஸவத்தையநுபவிக்கும் பாக்கியர் சில பாக்யசாலிகளுக்கே கிட்டும். ஸமீபித்திருக்கின்ற பிங்கள வத்ஸர மங்களாநுபவத்தை ஒருவரும் இழக்கலாகாதென்று விஜ்ஞாபிக்கத் துணிகிறேன். ... ... ...

## மீண்டும்மீண்டும் விஜ்ஞாபிக்கிறேன்

எம்பெருமானாருடைய ஸஹஸ்ராப்த பூர்த்திக் கொண்டாட்டத்தைப் பற்றி இன்னும் முப்பத்தெட்டுவருடங்களுக்குப்பிறகு ஊக்கங்கொள்ள வேண்டியதாகும். அப்போது திருவவதார ஸம்வத்ஸரமில்லை. அது இப்போது ஸமீபித்திருப்பதால் ஸ்ரீவைஷ்ணவ ப்ரமுகர்கள் ஐகமத்யத்துடன் ச்ரத்தைகொள்ளவேணும், ஸ்ரீந்ருஸிம்ஹப்ரியா, ஸ்ரீரங்கநாதபாதுகா, ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம், புநாவஸு பத்ரிகை ஆகிய இந்தப் பத்ரிகைகளும் அடுத்த நள வருஷம் முழுவதும் எம்பெருமானார் பெருமைகளைப்பற்றிய வியாஸங்களையே விசேஷித்து வெளியிட்டுவர வேணுமென்பது அடியேனுடைய உத்கடமான உத்கண்டை.

அடியேன் ஸ்ரீராமாநுஜனிற் போலவே மற்றும் வைதிகமநோஹரா என்கிற ஸம்ஸ்க்ருத பத்ரிகையிலும் (தெலுங்கு) ஸ்ரீராமாநுஜ பத்ரிகாவிலும் இனி பகவத்ராமாநுஜ திவ்ய ஸூக்திவிசேஷங்களையே வெளியிட்டுவர ஸங்கல்பித்திருக்கிறேன், மற்றுமுள்ள மஹான்களும் இங்ஙனமே விரதங்கொள்ளவேணுமென்று ஸவிநயம் பிரார்த்தித்து நிற்கிறேன். P. B. A.

# ஓர் ஸந்தோஷ ஸமாசாரம்

7-3-76 ஞாயிற்றுக்கிழமையாகிய இன்று காலை 9 மணிக்குமேல் உத்தரமேரூரில் திருப்பாவைமகாநாடுவிழா நடைபெற்றது Retd High Court Judge உயர்திரு N. கிருஷ்ணஸ்வாமி ரெட்டியாரவர்கள் விஜயம்செய்து தலைமைதாங்கி நடத்தி வைத்தார்கள். ஸ்ரீவைஷ்ணவஸ்வாமிகளும் பக்தபாகவதோத்தமர்களும் பலநூற்றுவர் குழுமியிருந்தனர். அன்பர்களின் அழைப்புக்கிணங்கி நாமும் சென்றிருந்தோம். கோதைதமிழ் ஐயைந்துமைந்தும்பற்றிச் சிறிது சொற்பொழிவாற்றவுமாயிற்று. பின்னர், பலருடையபாராட்டுரைகள் நடைபெற்றன. 1. உயர்திரு N. K. R ஜட்ஜ் அவர்கள் பேசியது,-ஏறக்குறைய 7, 8 வருஷகாலமாக ஸ்ரீ P B. A ஸ்வாமிகளோடு இணக்கம் எனக்கு ஏற்பட்டது. இத்தகைய சபைகளில் அப்போதப்போது சந்திக்கவும் வாய்ப்பு ஏற்படுகின்றது. அப்படிப்பட்ட சமயங்களில்மட்டுமல்லாமல் நண்பர்களோடும் அன்பர்களோடும் பேசநேருங்காலங்களிலும் நமது ஸ்வாமிகளைப் பற்றிப்பேசுவதும், அவர்களுக்கு மனமார்ந்த மங்களாசாஸனமொழிகளைப் பொழிவதுமே என்னுடைய பணியாக இருந்துவருகிறது—என்று சொல்லி பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டென்று பலகால் பெருமுழக்கமாக கர்ஜித்தார்... இந்த சமயத்தில் நமது ரெட்டியார் அவர்களுக்கு "அறநெறிச் செல்வர்" என்னும் விருது உத்தரமேரூர் பிரமுகர்கள்சார்பில் எம்மால் வழங்கப்பட்டது.

(2) பின்பு வியாகரணவேதாந்த வித்யாநிதியான. உவே. வீரவல்லி, வாஸுதேவாசாரியர்பேசினார். இவரது பேச்சைப்பற்றிச் சொல்லவேணுமோ? அவருடைய பேச்சுக்களில் என்னை உருகவைத்த பழங்கதையொன்றையெடுத்துப் பேசினார்—

"1947ஆம் வருஷத்தில் சென்னைத் தொண்டமண்டலம் ஸ்கூல்ஹாலில் நம் ஸ்வாமியின் உபந்யாஸம்—திருவாய்மொழியில் (6-2) 'மின்னிடை மடவார்கள் நின்னருள் சூடுவார் பாசுரம் நடந்து கொண்டிருக்கிறது. ஈட்டுஸ்ரீஸூக்திகளை அப்படியப்படியே கொட்டியாகிறது. 'உன்னுடைய சுண்டாயம் நானறிவன்' என்றவிடத்தில் எவ்வளவோ தமிழ்நூல் விசேஷங்களை வாரியிறைத்தாகிறது. பலருடையவேஷ்டிகள் கண்ணீர்ப்பெருக்கினால் நனைந்து கொண்டேயிருக்கிறது' என்றுசொல்லிக் கொண்டே போகிறார் ஸ்ரீவாஸுதேவாசாரியர்.

அன்பர்காள்? இந்த ப்ரசஸ்ஸோக்திகளுக்கு மகிழ்ந்து இதைநான் இங்கு எழுதவில்லை. உண்மைகேளீர். எனது வாழ்க்கையில் சென்னைத் தொண்டமண்டலம் ஸ்கூல்ஹால் அநுபவமென்பது தனிப்பட்டது. அப்போதிருந்தவர்களில் (நாநாஜாதியர்களில்) ஆயிரவர்க்குமேல் மறைந்துபோயினர். நம்வாஸுதேவாசாரியரொருவர் இவ்வளவு ஞாபகத்தோடு இருக்கிறாரேயென்பது பற்றி எனக்குப் பரம ஸந்தோஷம் "இதைப் பத்ரிகையில் மறவாமல் குறைக்காமல் வெளியிடவேணுமென்றும் நியமித்தார் நம்வாஸுதேவாசார்ய ஸஹ்ருதயஸுஹ்ருந்மணி. இவருடைய உருவப்படம் கீழே பக்கம் 49ல் ஸ்ரீமதுராந்தக வித்வத் ச்ரேணியில் காண்க.



ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி. (திருநாராயணபுரம்) யதுகிரி யதிராஜ ஜீயர்ஸ்வாமி. 2. ஸ்வாமி பக்கத்தில் ஸ்ரீமான மேதாவி மஹாமதி M. A. வேங்கடகிருஷ்ணன் B,A திருவலலிக்கேணி.



—கடிதம்—
K. V. அனந்தாசாரியர்,
M. A. வெங்கடகிருஷ்ணன்

## திருவல்லிக்கேணி தென்னாசார்ய ஸம்ப்ரதாய ஸபை

"ஆழ்வார்களேற்றம் அருளிச்செயலேற்றம்
தாழ்வாதுமின்றியவைதாம் வளர்த்தோர்—ஏழ்பாரும்
உய்யவவர் செய்த வியாக்கியைகளுள்ளதெல்லாம
வையமறியப் பகர்வோம் வாய்ந்து" —என்றருளிச்செய்த

பொய்யிலாத மணவாள மாமுனிகள் திருவாக்கை நிறைவேற்றுவதற்காக மேற்படி ஸபை ஸ்ரீமத் பரமஹமஸேத்யாதி **யதுகிரி யதிராஜ ஜீயர்ஸ்வாமி** தலைமையில், ஸ்ரீ காஞ்சீ. மஹாவித்வான் ஸ்ரீமான் உ. வே. ப்ரதிவாதிபயங்கரம் **அண்ணங்கராசார்யர் ஸ்வாமியால்** 1-2-76 அன்று மிகவும் விமரிசையாக ஆரம்பிக்கப்பட்டது. அதன் முதல் அங்கமாக "அருளிச்செயலேற்றத்தைப்" பரப்புவதற்காக "செய்யமறைதன்னுடனேசேர்ந்து" வேத திவ்யப்ரபந்த வகுப்புக்கள் திருவல்லிக்கேணியில் ஆரம்பிக்கப்பட்டிருக்கின்றன. மேலும் ஸ்ரீபாஷ்ய பகவத்விஷய வகுப்புக்களும் விரைவில் திருவலலிக்கேணியில ஆரம்பிக்க உத்தேசிக்கப்பட்டுள்ளது. விசேஷங்கள் பல வெளிவரும்.

— கடிதம் —

## ஸ்ரீ திருமங்கையாழ்வார் திருநாங்கூர்த் திருப்பதிகள் மங்களாசாஸன உத்ஸவம்

இவ்வாண்டு ஸ்ரீ திருமங்கையழ்வார் தை மீ 17 ஆம்தேதி அமாவாசை யன்று திருநகரியிலிருந்து திருக்குறையலூர், மங்கை மடம்; திருக்காவளம்பாடி திருமணிக்கூடம், திருப்பார்த்தன் பள்ளி எம்பெருமான்களை மங்களாசாஸனம் செய் தருளி காவிரிக்கரையில் மஞ்சள் குளி மண்டபத்தில் திருவரங்கத் தெம்பெருமான். திருநறையூர் எம்பெருமான் மாலை பரிவட்ட மரியாதைகளைப் பெற்றுக்கொண்டு திரு மஞ்சனம் கண்டருளினார். அன்றிரவே திருநாங்கூரில் மணிமாடக்கோயில், வண் புருடோத்தமம், செம்பொன் செய்கோயில், திருத்தெற்றியம்பலம், அரிமேயவிண் ணகரத் தெம்பெருமான்களை மங்களாசாஸனம் செய்து மீண்டும் மணிமாடக்கோயி லுக் கெழுந்தருளினார்.

தை மீ 18ஆம் தேதியன்று ஞாயிற்றுக்கிழமை நாங்கைத் திருப்பதி பதினொரு எம்பெருமான்களையும் ஒருசேர ஓரேபந்தலில் மங்களாசாஸனம் செய்தருளி மாலை, ஸ்ரீசடகோப மரியாதைகள் பெற்றுக்கொண்டு ஆழ்வார், ஸ்ரீமணவாள மாமுனி களுக்கு மாலை. ஸ்ரீராமானுஜ மரியாதைகளை அருளினார். அன்றிரவு பதினோரு எம் பெருமான்களின் கருடவாஹன சேவையும், ஆழ்வார்கள் சேவையும் மணவாள மாமுனிகளின் எதிர்சேவையும் ஒன்றுசேர, திருநாங்கூர்த் திருப்பதி பாசுர இயல் கோஷ்டி நடைபெற்றது,

தை மீ 19ஆம் தேதியன்று திருநாங்கூரில் திருமஞ்சனம், திருப்பாவை சாற்றுமுறை ஆனபிறகு, திருவெள்ளக்குளம், திருத்தேவனார்தொகை, திவ்ய தேசங்களை மங்களாசாஸனம செய்துகொண்டு ஆழ்வார் திருவாலிக் கெழுந்தரு ளினார். திருவாலியில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீலக்ஷ்மி நரசிம்மப் பெருமாளுக்கு 25 வருடங்களாக நின்றிருந்த கருடசேவை இந்த ஆண்டு அதிவிமரிசையாக நடை பெற்று ஸ்ரீஆழ்வாருக்கு மாலை பரிவட்ட மரியாதைகள் அளிக்கப்பட்டன.

திருப்பல்லாண்டு, கண்ணிநுண் சிறுத்தாம்பு, வாடினேன்வாடி, திருவாலி விஷயமான முப்பது ப்ரசுரங்களும் இந்த எம்பெருமான் சந்நிதியில் சேவிக்கப்பெற்று திருநகரியில் ஸ்ரீவயலாலி மணவாளன் கருடசேவையுடன் இந்த மங்களாசாஸன உத்ஸவம் பூர்த்தியாயிற்று.

ஆண்டுதோறும் மேற்படி உத்ஸவத்தில் ஸ்ரீவைஷ்ணவர்களும், பக்தர்களும் கலந்துகொண்டு எம்பெருமான்களின் கிருபாகடாக்ஷத்திற்குப் பாத்திரமாகுமாறு பிரார்த்திக்கப் படுகிறார்கள்.

இப்படிக்கு,

பக்தமண்டலி.